*Ūḻiyaṉ*
*Malar 8, itaḻ 17*
*January 17, 1928*

Record no. 148

சென்னைப் பதிவு எண் கஉ0௯

பொங்கல் மூன்னிட்டு
கஉ-பக்கங்களே.
விலை அணா ஒன்றரை.

தந்தி விலாசம்:—"OOLIAN."

# ஊழியன்

செவ்வாய்தோறும் நிகழ்வது.

**சந்தா விபரம்.**

| | | |
|---|---|---|
| வருடச் சந்தா | ... | ௩—0—0 |
| ஆறுமாதச் சந்தா | ... | ௧—0—0 |
| வெளிநாடு வருடச் சந்தா | | ௪—0—0 |

**விளம்பர விகிதம்.**
அங்குலம் ௧-க்கு வாரம் ௧-க்கு 0—அ—0
நீடிமன்ற விளம்பரம் அங், ௧-க்கு ௧—0—0
ஒப்பந்த விளம்பரவிகிதத்திற்குக்காரியஸ் தருக்கு எழுதவும்.

ஆசிரியன்—ராய. சொக்கலிங்கன்.

குடிதழீஇக் கோலோச்சும் மாநில மன்னன்
அடிதழீஇ நிற்கும் உலகு. —திருக்குறள்.

நல்லாண்மை யென்ப தொருவற்குத் தான் பிறந்த
இல்லாண்மை யாக்கிக் கொளல். —திருக்குறள்.

மலர் அ. காரைக்குடி. பிரபவ-ஞ தைமீ சஉ (கஎ—க—உஅ) இதழ் கஎ

## மலர் மணம்.

### காதல் வாழ்வு.

"காதல் வாழ்வு" என்னும் இத்தலைப் பெயர் கண்ட ஞான்று பல நன் மக்கள் உள்ளம் கனிந்து இக்காதல் வாழ்வின் மேற் செல்லுமென்பது திண்ணம். ஏன்? காதல் வாழ்வு அவ்வளவு புறம்பாகிவிட்டது நம் மக்கட்கு. அவ்வாழ்வு வாழ வேண்டுமென்னும் ஆசை அறிவுள்ள மக்கள் அகத்தே அடங்காது குடிகொண்டிருப்பதை நாம் அறிவோம். எனவே, அவ்வாழ்வில் விருப்புடையார்க்கு அவ்வாழ்வு கிட்டா இந்நாளில் "காதல் வாழ்வு" என்னும் இக்கட்டுரை பெரிதும் இனிக்கும் எனப்பேசவும் வேண்டுமோ? கட்டுரைமட்டமாக இருந்த போழ்தினும் "காதல் வாழ்வு"க் கட்டுரையாகலின் பலர் கருத்தைக் கவர்தல் கூடும். ஆனால் மட்டமெனினும் நமது கட்டுரை அத்தகைத்து என நாம் ஒப்புக் கொள்ள முடியுமா? அது இயற்கையன்று. இதில் நாம் நல்ல அநுபவம் பெற்றிருக்கின்றேமன்றோ? இது நமது அறிவாற்றலின்பாற்பட்ட ஒன்றன்று. பத்திராசிரியரவர்க்கும் கட்டுரையையும் கட்டுரையாளரையும் பற்றிய அனைத்தும் தெரிந்திருக்கும். எப்படியிருப்பினும் தன்னுடையதைக் குறைத்துப் பேசத்தனக்கு விருப்பமிராது என்பதொன்று. அது தவிர தன் கட்டுரை குறைவுபட்டது எனத் தனக்குத்தெரியாதென்பது ஒரு முக்கியப் பொருளல்லவா? அது அம்மட்டோடு அமையட்டும். மற்றொன்றை விரித்தல் வேண்டாம். காதல் வாழ்வின் மேற் செல்வோம்.

* * *

காதல் வாழ்வு இன்னது எனத் தெளிவுற விளக்குதல் நன்றெனக் கருதுகிறேம். காதல் என்ற சொல் பலரை இழுக்கின்றதெனினும் அதன் உட்பொருள் பலரால் அறியப்படவில்லை. "காதல் என்ற அரிய சொல்லுக்கு "பேரன்பு" என்று பொருள் கொள்தல் வேண்டும். காதலுக்கு இப்பொருளைத் தவிர இதற்கு முற்றும் புறம்பான வேறு பொருளும் கொள்தல் பொருத்தமின்று என நாம் கருதுகின்றேம். காதல் வேறு காமம் வேறு எனத் தெளிவாக உணர்தல் வேண்டும். தன்மையில் பெரிதும் வேறுபட்ட இவ்விரண்டும் ஒன்றெனக்கல்லாதார்தாம் மயங்குகின்றனரெனக் கொள்தற்சில்லை. கற்றறிந்த பழைய புலவர்கள்கூட இவ்விரண்டையும் பொருள் வேற்றுமையின்றி—சிறப்பாகக் காதலைக் காமம் என்னும் பொருளில் பெய்திருக்கக் காண்கின்றேம். அகராதி நிகண்டு முதலியவற்றிலெல்லாம் காமத்திற்குரிய பொருள்களுட் பல காதலுக்கும் காதலுக்குரிய பொருள் காமத்திற்கும் வரைந்திருக்கக் காண்கின்றேம். காமம் என்பது மெய்யுறு புணர்ச்சியொன்றையே குறிப்பதாக இருத்தல் வேண்டும். அதனும் நெறிவலா நெறிச்செல்தலையே அது பெரிதுங் குறித்து நிற்றல் வேண்டும். காமம் கூடா ஒழுக்கம். காதல் அதன்பாற்பட்டதன்று. ஆனால் கூடாஒழுக்கம் கூறவந்தவிடத்து காதல் என்ற அருஞ் சொல் பெய்யப்பட்டிருக்கின்றது முன்னை நூல்களில். புகழேந்தியார்,

> "காதல் கவரூடல் கள்ளுண்டல் பொய்ம்
> [மொழிதல்,
> ஈதல் மறுத்தல் இவை கண்டாய்-போதில்,
> சிவணாமை வைகும் திருநாடா செம்மை
> நிவணாமை பூண்டார் நெறி."

என்று அடுக்கிவிட்டார். இச் செய்யுளுக்கு உரை வரைந்த மகா வித்வான் கோ. இராஜகோபாலப்பிள்ளை யென்பார், காதல் என்ற சொல்லுக்கு ('அயல் மாதர்மேல்) மோகங் கொள்தல்' என எழுதியிருக்கின்றார். பொருள் அவ்வாறு செய்தது பிசகல்ல. இவ்விடத்து இவ்வாறே பொருள் கொள்ள முடியும். உடன் சேர்த்தெண்ணப்பட்ட பொருள்களும், பாட்டுக் கருத்தும் அங்ஙனமையனவே. கல்வியிற் பெரிய கம்பரும் காதலைக் காமம் என்னும் பொருளில் கூறாமலில்லை.

> "காந்தையருக் கணியனைய சானகியார்
> பேரழகும் அவர்தங் கற்பும்
> ஏந்துபுயத் திராவணனூர் காதலும்"
> "கள்ளிருக்கும் மலர்க்கூந்தற் சானகியை
> மனச்சிறையிற் கரந்த காதல்"

என்பன வாதி கம்பர் கழறுகின்றார். ஈண்டுக் காதல் புகழேந்தியின் பாட்டின் கருத்தோடொப்பவே வைக்கப்பட்டிருக்கிறது. பிறற்குரியாள் தோள் தோய நச்சும் காமத்தோடொப்பக் காதற்கிளவியைத் தீட்டுப்படுத்தல் ஆராய்ந்து விலக்கத்தக்கதென நாம் கருதுகின்றேம். "ஏந்து புயத்திராவணனூர் காமமும்" என்றிருக்கலாம். "சானகியை மனச்சிறையில் கரந்த காமம்" என்றிருக்கலாம். இவ்வாறிருத்தலில் பிழை ஏதும் இல்லை இன்னும் இவ்விடங்களில் பழைய ஏட்டுப்பிரதிகளை நன்றாகக் கூர்ந்து நோக்குதல் வேண்டும். ஒரே சொல் உயர்ந்த பொருள் இழிந்த பொருள் ஆகிய இரண்டையும் காட்டி நிற்றல் மொழிக்குச் சிறப்பில்லை. இப்பொருளில் மற்ற நூற்களையும் எடுத்து ஈண்டு விருக்கின் காதல் வாழ்விற் கருத்தை விரித்து முடிக்காது போய்விடும். இச் சொல்லாராய்ச்சி பரக்க ஆராயவேண்டுவது. இப்பெரியபொருளை வேறுசமயம் பார்க்கலாம். அறிஞர் ஆராய்ச்சிக்கு ஒரு கால்கோள் கண்டதோடு நிறுத்துவோம்.

* * *

ஈண்டுக் "காதல் வாழ்வு" என்று எடுத்துக் கொண்டது காம வாழ்வை அன்று என்று கூறவும் வேண்டுமோ? ஈண்டுக்கொண்ட பொருள் பேரன்பு வாழ்வேயாகும். இப் பேரன்பு வாழ்வு—அதாவது காதல் வாழ்வு என்பது என்ன? பால் வேறுபட்ட இருவர் அன்பு மேம்பட்டுக் கூடிவாழும் வாழ்வே காதல் வாழ்வு. காதல் வாழ்வு வாழ்வார்க்கு ஆண் பெண் என்ற பால் வேறுபாடு தவிரப் பிற வேறுபாடு இல்லாதிருத்தலே சிறப்பு. இயல்பான வடிவ வேற்றுமை தவிரப் பிற எவ்வேற்றுமையும் இல்லா இருவர் பெரு வாழ்வே காதல் வாழ்வு. எல்லாவற்றினும் கருத்தொன்றிய இருவர் இருத்தல் பெரிதும் அரிது; ஆதலின் முரணின்றி இயன்றவரை ஒன்றிப் பேரன்பு ஒன்றையே முன்னிறுத்திக்கூடிய வாழ்வாக இருந்தால் போதும். அதுதான் காதல் வாழ்வு. "காதல் வாழ்வு என்பது ஆணும் பெண்ணும் கலந்ததாகவே இருக்க வேண்டிய நியதி என்ன? பேரன்புடைய வாழ்வு காதல் வாழ்வானால், பேரன்புடைய ஒருவராக வாழும் வாழ்வோ, அன்றி அத்தகைய இரண்டு, அல்லது பல ஆண்களோ பெண்களோ கூடி வாழும் வாழ்வோ காதல் வாழ்வு ஆகலாமன்றோ?" என்ற வினாப் பிறக்கலாம். உண்மைதான். பேரன்புடையார் வாழ்வெல்லாம் காதல் வாழ்வுதாம். என்றாலும் காதல் வாழ்வு என்ற சொற்கட்குச் சிறப்பாக ஒருவனும் ஒருத்தியுங்கூடி வாழும் இல்வாழ்வே பெரிதும் பொருந்தும். உலகத்தில் இல்வாழ்வாரே பெரும்பாலார். அன்றியும் இல்வாழ்க்கையில் நில்லாது நெறி நிற்பார் அரியரினும் அரியர். இது உலகறிந்த ஒன்று. எனவே, நெறிகடவாது ஒல்லுமாறு காதல் வாழ்வு ஆற்ற வல்லார் காதலர்கூடிய ஆண் பெண் இருவரே.

* * *

பாரதத்தில் பிறந்து இவ்வாழ்வு வாழவே அன்றோ? இந்நாள், காதல் வாழ்வின் கரை கண்ட இந்திய நாட்டில், எத்தனை மக்கள் காதல் வாழ்வு வாழ்கின்றார்? இதனை எண்ணுங்கால் உள்ளங் குழைகின்றது! அம்மம்ம, காதல் வாழ்வு இந்தியாவை விட்டுப் பல ஆயிரம் கற்கள் கடந்து ஓடிவிட்டது. இந்நாள் ஒருவகையாகக் காதல் வாழ்வு வாழ்வார் மேலை நாட்டார் என்று விளம்பலாம். காதல் மணம் நடந்தாலன்றோ காதல் வாழ்வு வாழ முடியும்? இந்தியா காதல் மணங்கண்டு எத்தனைப் பல ஆண்டுகள் ஆகிவிட்டனவோ? காதல் மணம் அற்றவன்றே காதல் வாழ்வு பட்டுவிட்டது. இந்தியாவில் காதல் குறித்து மணம் நடத்தல் அரிதினும் அரிது. காதல் வாழ்வு பெருகினால் காம வாழ்வு அருகித் தேயும். ஒரு சம்பந்தமுமில்லா இருவர் இணைத்து வைக்கப்படும் வழக்கம் தொலைந்தாலன்றே காதல் வாழ்வு மலரும். காதல் வாழ்வை எண்ணிறந்த சனியன்கள் தடைசெய்து நிற்கின்றன. வகுப்பு என்ற ஒன்று காதல் வாழ்வை இடைநின்று பெருந்தடை செய்கின்றது. "அன்புக்கும் உண்டோ அடைக்குந்தாள்" அன்பை வகுப்புத்தடுத்துவிடவில்லையோ? இந்நாள் வாழ்வு காதலால் இணைவில்லை. பணத்தால் இணைகின்றது; பலத்தால் சேர்கின்றது; குலத்தால் கூடுகின்றது; பிறவால் பொருந்துகின்றது. இன்ன தன்மைத்தாய காமப் பொருள்களால் ஈண்டிய வாழ்வு காதல் வாழ்வாதல் யாங்ஙனம்?

* * *

அன்பின் வசப்பட்ட இருவர் சேர்தலன்றி ஏனையோர் கூடுதலில் என்பயன்? அதினும் பிறர் கூட்டுதல் என்பது எவ்வளவு கொடுமை! இரண்டு மனிதரை அவர் விருப்பமே யறியாது பிறர் சேர்த்துவைக்கும் உரிமைபெற்றிருப்பதும், இதற்கு இணங்குதல் கடமையெனக் கொண்ட அவர் மனப்பான்மையும் சிறிது சிந்திப்பார்க்குப் பெரிதும் வியப்பாகத் தோன்றுதோ? இத்தொல்லைகளெல்லாம் நீண்டு நின்று நிலவுதற்கு, அறிவைக் கட்டிவைத்து விட்டு, ஆராய்ச்சியை அறவே விடுத்து, வழக்கம் ஒன்றையே பற்றித் திரிவதே காரணம். எந்தப் பொருளையும் ஆராய்ந்து காண்பவரே அறிஞர். அவரே காதல் வாழ்வு வாழவல்லார். மற்றையோர் காதல் வாழ்வைக் கனவினுங் கருதத் தகுதியற்றவர். அம்மனிதராக் அவருக்கும் நலனில்லை; அவனிக்கும் நன்றில்லை.

* * *

உலகிலுள்ள எல்லாப் பொருள்கட்கும் அடிப்படை இல்லற வாழ்க்கை. அவ்வாழ்க்கை காமங்கருதிய ஒன்றல்ல. அவ்வாறு கருதுவார் அறிவீனர். சிலர் கண்கட்கு இல்வாழ்க்கை அவ்வாறே படுகின்றது. அதற்கேற்றவாறே அவர் நடந்தழிகின்றார். அன்றி அதை உயர்வாகக் கொள்வாரும் வாழ்வைக் காதல் வாழ்வாக்க முயலவில்லை. அவரும் மற்றவர் வழியேதான் கருமமாற்றுகின்றார்.

(அடுத்த பக்கம் பார்க்க)

## கதர் நிதியின் பின் வசூல்.

கதர் நிதிக்கு, பின்னும் வசூலான கீழ்க் கண்டதொகைகளை நன்றியுடன் ஏற்றுக் கொள்வதாக, திரு. ச. ராஜகோபாலாச் சாரியார் அறிவிக்கிறார்:—

திரு. அய்யாப முத்துக்கருப்பப்பிள்ளை ரூ ௧௦; திரு. சின்னையாநாயுடு ரூ ௧௦; திரு. மெய்யப்பபிள்ளை ரூ. ௫; திரு. அண்ணாமலைச் செட்டியார் ௨௫; திரு. பி. எஸ். ஆர். எம். சாமிநாதன் ரூ ௧௫; சைகோன் திரு. கே. ஆர். வெங்கடாசலம்; ரூ ௩௦௧—௧—௧; சிங்கப்பூர் திரு. நடேச முதலியார் ரூ ௧௧—௪—௦; கே. எஸ். அ .எஸ். பிரதர்ஸ் ரூ ௨௦; அரியூர் திரு. பத்மநாபபிள்ளை ரூ அ; திரு. எம். வி. கே. கோவிந்தராஜு ரூ ௧௦; பாபநாசம் திரு. என். ஆர். வீராசாமிபிள்ளை ரூ ௫; கொச் சின்சைனா திரு. எல். லீமான்ஸ் ரூ ௧௧௬௦; சிங்கப்பூர் திரு. எம். ராமநாதன் செட்டியார் ரூ. ௬௭; ஆகமொத்தம் நவசக்தியின் மூலம் கிடைத்ததொகை ரூ ௩,௬௧௧—௧௩—௯.

திரு. ரங்கசாமி ராஜா அவர்களின் மூலம் கிடைத்த, ராஜப்பாளையம் ஏலத்தொகை ரூ. ௬௭௫.

பிடாட் காடுபோர்டுஹைஸ் கூலிடமிருந்து ரூ ௩௭.

சென்னையில் காந்தியடிகள் தங்கிய காலத்தில் வசூலான சில்லறை வசூல் ரூ அ௩.

மேலும்' இலங்கையிலிருந்து கிடைத்த தொகைகள் வருமாறு.— மதாரா திரு. எ. பி. எட்வின் அபேசுரையாவின் மூலம் ௹ ௭௫; டாக்டர் முத்தையர் அவர்களின் மூலம் ரூ ௧௫௨.

—

### இரங்கூன்.

தனவைசிய இளைஞர் தமிழ்ச்சங்கம்:— நிகழும் பிரபவவாண்டு மார்கழித் திங்கள் பதினைன்காம் நாள் வியாழக்கிழமை மாலை மூன்றுமணிக்கு திருவாளர் லெ. மு. நா. முத்தரசப்ப ஐயா அவர்கள் (தாயுமானவர்) தலைமையில் நம் சங்க நிர்வாக அங்கத்தினர்களில் ஒருவராகிய திரு. இராம. சிதம்பரச் செட்டியாரவர்கள் தாய்நாடு செல்லுவது கருதி அவர்கட்கு நன்றி கூறுமுகத்தான் தேபான விருந்துடன் ஓர் கூட்டம் கூடியது. அதுகாலை சிற்றுண்டி முதலியன வழங்கப்பெற்றுப் பல அன்பர்களால் அன்னாரின் புகழைக்கூறப் பின் தலைவரவர்கள் தக்க முடிவுரைகூற அவை ௬-மணிக்கு இனிது நிறைவெய்தியது, என்று காரியதரிசி எழுதுகிறார்.

—

இல்வாழ்க்கையே வாழ்க்கையுளெல்லாம் மேம்பட்டது. "அறனெனப்பட்டதே இல்வாழ்க்கை." "இல்லறமல்லது நல்லறமன்று" இல்லற வாழ்க்கையே உலகை ஆக்கவல்லது. அவ்வாழ்க்கை காதல் வாழ்க்கையாக அமையாத வழி உலகம் வாங்ஙனம் நல்லாற்றில் அமையும்? உலகுயிரெல்லாம் ஒழுங்குபெற நிற்றல் வேண்டுமானால் வாழ்வு காதல் வாழ்வாதல் வேண்டும். "அன்பிலார் எல்லாந்தமக்கேயுரியார்; அன்புடையார் என்புமுரியார்பிறர்க்கு." உலகத்துள்ளபொருள்களுளெல்லாம் தலைசிறந்தது அன்பு. பக்தர்கள் "என்னுடை அன்பே' எனக் கடவுளை அழைக்கக் காண்கின்றோம். உலகத்துயிர்க்கெலாம் அன்புசெலுத்தல் மக்கட்குக் கடனாகவிருக்க, வாழ்க்கைக்கு அமைந்தஇருவர் ஒருவரோடொருவர் கொள்ளவேண்டியஅன்பை நிவ்வளவென்று அறுதியிட்டுரைத்து விட முடியுமா? அப்பெரும் அன்பையே காதல் எனக் குறிக்கின்றோம். காதல் வாழ்வில்லா உலகம் பாழ்படுமென்பதை நுனித்துணர்வோர் அறியாதிருக்க முடியுமோ? காதல் வாழ்வென்பது கணவனும் மனைவியும் கலந்து உறவாட அஞ்சும் கசட்டு வாழ்வன்று. காதலிருவர் கருத்தொத்துக் கொஞ்சிக் குலாவி மஞ்சரைப்பெற்றுக் களித்து நீவணபிரியாது உலகம் புரந்து வாழும் வாழ்வே காதல் வாழ்வு.

—



## விளம்பரம்.

புதுக்கோட்டைசமஸ்தானம் மயம் தாலுகா பொன்னமருவதி டிஸ்திரிக்ட் பொன்னமராவதி வட்டம் வலையபட்டியிலிருக்கும் மு துக்கருப்பஞ் செட்டியார் மகன் ந. லெ. லெட்சுமணஞ் செட்டியார் இ விளம்பரம் மூலம் பொதுஜனங்களு தெரிவிப்பது என்னவென்றால்:—

தற்போது எனக்குள்ள ஸ்தா சங்கம சொத்துக்கள் அனைத்து எனது சுயார்ஜித மென்றும் அ களை எனது குமாரர்களான (1) மு துக்கருப்பன் (2) ராமநாதன் (3) வன் ஆகிய மூவரும் எனக்கு பிற் லம் பிரித்துக்கொண்டு அனுபவித் வரலாமே தவிர அவைகளை விற்கவே அல்லது வேறு விதத்தில் பராதீன செய்யவோ கூடாதென்றும் அவர் ளுக்கு ஏற்படும் ஆண் சந்ததிகளே சர்வ சுதந்திர பாத்தியதையுடன் அனுபவித்து வரவேண்டுமென்றும் 1925-ளு செப்டம்பர்மீ 2-உயில் உயிலெழுதி ரெஜிஸ்தர் செய்துவைத் திருக்கிறேன். இதனை எல்லா ஜன களும் அறிந்து கொள்ளவேண்டியது.

இப்படிக்கு,
நழ. லே. லேட்சுமணன்
(199D.) செட்டியார்.

—

சமீபத்தில் தெம்ஸ் நதியில் வெள் ளம் பெருகி லண்டனிலுள்ள பல கட் டிடங்கள் இடிந்து போயினவாம். இவ் வெள்ளத்தினால் பாதிக்கப் பட்டவர்க ளுக்கு, ஜார்ஜ் மன்னர் ௩௦௦ பவுனும் மேரி அரிசி ௫௦ பவுனும் நன்கொடை யளித்தனராம்.

* * *

கென்யாவில் ஜனவரிமீ அவ ஒரு பலத்த பூகம்பம் ஏற்பட்டதாம். அத னால் சில கட்டிடங்கள் மாத்திரம் நொ ருங்கிப் போனதாகத் தெரிகிறது,

—

## மரண தண்டனை!

ஹென்ரிபோர்டு:—"ஒரு மனிதனைக் கொலைசெய்தல் என்பது பிழையாகும்—இதை ஒவ்வொருவரும் ஒப்புக்கொள்ளுவார்கள். அந்த மனிதனுக்கும் அது நன்மை யளிப்பதில்லை—ஜனசமூகத்துக்கும் அதனுல் நன்மை உண்டாவதில்லை. வறுமைக்குப் பரிகாரமாகத் தானம் வழங்குவது எவ்வாறு அடிப்படையிலேயே தவறுகுமோ அவ்வாறே, குற்றத்தையொழிக்கும் பரிகாரமாக மரணதண்டனை விதிப்பதும் அடிப்படையிலேயே தவறுகும். ஆனல், குற்றவாளியை நாம் கொல்லுகிறோம்—கொல்ல விரும்புகிறோம். ஏனெனில், பிரச்சினையைத் தீர்ப்பதற்கு அதுவே மிக எளிய வழியாகக் காணப்படுகின்றது. ஒரு மனிதனுக்குப் 'பூசை' கொடுப்பதைக் குறித்து நான் யோசிக்கமாட்டேன். ஆனல், நான் அவனைக் கொல்லவிரும்பேன். தூக்குத் தண்டனையைத் தாமே நிறைவேற்றச் சித்தமாயிருந்தாலொழிய, ஒருவர் எவ்வாறு கொலைத்தண்டனையை ஆதரிக்கமுடியும் என்பது எனக்குத் தெரியவில்லை. அந்த வேலையைச் செய்ய ஏற்றுக்கொள்ளக் கூடிய மனிதர் மிகச் சிலரேயிருப்பர் என்று நான் கருதுகிறேன். அவ்வாருக, எந்த மனிதரைக் கொண்டாவது கொலையைச் செய்யுமாறு, எவ்வாறு அரசாங்கத்தை நாம் கேட்கலாம்? கொலைத்தண்டனை குற்றத்தைத் தடுக்கக்கூடியதல்ல என்பது எனது நிச்சயம். வேருேர் மனிதனைக் கொலைசெய்யச் சித்தமான நிலையை எட்டியுள்ள ஒரு மனிதன் தானே கொலையுண்டு போகக் கூடியதைக் குறித்தும் கவலைகொள்ளுவதில்லை."

லீனு மாடெலின் பிலிப்ஸ்:—"மனிதர்களைத் தூக்கிலிடுவது, மின்சார நாற்காலிகளில் அவர்களை எரித்துக்கொல்லுவது, அவர்கள் சிறையிற் கிடந்து தங்கள் வாழ்நாள் முழுதும் துன்பமயமாய்க் காலங்கழிக்குமாறு செய்வது ஆகிய இவையெல்லாம், குற்றம் என்ற பிரச்சினையை முடிவு செய்வதில் உணர்ச்சிகளின் வேகமாகதால் உண்டானவை என்பது என் கருத்து. இத்தகைய காட்டுமிராண்டித் தனத்தை ஆதரிக்கும் மனிதர்கள் குற்றம் என்ற பிரச்சினையைக் குறித்து அறிவுக்கிசையச் சர்ச்சை செய்வோரை, 'உணர்ச்சிகளின் வயப்பட்டுப் பேசுவோர்' என்று குற்றம்சாற்றுகிருர்கள். உணர்ச்சியின் வயப்படுதலாவது, அறிவுக் கிசைந்த பயனின்றி மனஇளக்கம் கொள்தலேயாகும். தண்டனையாக மனிதர்களைத் தூக்கிலிடுவதும், அவர்களைச் சிறையில் போடுவதும் அறிவைக்கொண்டு செயல் செய்வதல்ல; காரணங்களைக் குறித்துச் செயல் செய்யாமல் விளைவுகள் பற்றிச் செயல் செய்வதாகும். இதுவே வெறுக்கத் தக்க விதத்தில் உணர்ச்சிவயப்பட்டுக் காரியம் செய்தலாகும்.

"கொலை செய்தல்என்றகொடியஉதாரணத்தை அரசாங்கம் கைக்கொண்டிருப்பதை அழித்து விடுங்கள். சிறைக்குள்உள்ளமனிதர்களைமனிதவகுக்கத்தவராகவே, மறுபடியும் நன்னிலைக்குக் கொண்டுவரப் படக்கூடியவர்களாகவே கருதுங்கள்; சிறைப்பட்ட, அபாயமான விலங்குகளைப்போல அல்லாது தங்களுக்கும் மனித சமூகத்துக்கும் பயனுடையோராகச் செய்யப்படக் கூடியவராகவே, அவர்களைக் கருதுங்கள். கடினம் அடைந்து விட்ட குற்றவாளிகளோடுகூட, இளைஞர்களைச் சிறையிடாதீர்கள். எளியவர்கள் சுகாதாரமற்ற குடியிருப்புகளில் வசிப்பதை யொழித்து விடுங்கள். வேலையில்லாத் திண்டாட்டத் தொலையுங்கள். கொசுக்கள் நிறைந்த சேற்று நீர்த் தேக்கத்தில் எவ்வாறு விஷக்காய்ச்சல் உற்பத்தியாகிறதோ அவ்வாறே. இதனின்றுமே குற்றம் உற்பத்தியாகிறது."—"நியலீடீஸ்கல் பாத்"

---





## காந்தியடிகளின் சரித்திரம்.

### ஆன்மார்த்தப் பயிற்சி.

காந்தியடிகள் "நவஜீவன்" பத்திரிகையில் எழுதியது.

### நான்காம் பாகம்.

#### அத்தியாயம் ௩௪.

மாணவர்களது உடல், மனப்பயிற்சிகளைவிட அவர்களது ஆன்மார்த்தப் பயிற்சியே இன்னும் மிகவும் கடினமான விஷயமாக இருந்தது. ஆன்மார்த்தப் பயிற்சிக்கு மதநூல்களை நான் சார்ந்திருக்கவில்லை. என்ருலும், ஒவ்வொரு மாணவனும் தன்தன் சொந்த மதத்தின் மூலாதார விஷயங்களை அறிந்திருக்க வேண்டுமென்றும், தன் தன் சொந்த மதநூல்களைப் பற்றிய பொதுவான ஞானம் பெற்றிருக்க வேண்டுமென்றும் நான் கருதினேன். ஆதலினல் என்னல் முடிந்தமட்டில் அத்தகைய ஞானத்திற்கு நான் வசதி செய்திருந்தேன். ஆனல் அது அறிவுப்பயிற்சியின் ஒரு அம்சமேயாகுமென்று என் மனத்திற்பட்டது. டால்ஸ்டாய்ப்பண்ணையில் இளைஞர்களுக்குக் கல்விப் பயிற்சி யளிப்பதை நான் ஏற்றுக் கொள்வதற்கு வெகு காலத்திற்கு முந்தியே, ஆன்மார்த்தப் பயிற்சியென்பது ஓர் தனி விஷயமாகுமென்பதை நான் உணர்ந்திருந்தேன். ஆன்மார்த்தப் பயிற்சியென்பது, நற்குணப்பயிற்சியைப் பெறுவதும் கடவுளைப்பற்றியறிந்து கொள்வதும் சுயானுபவத்தைப் பெறுதலுமாகும். இளைஞர்களின் பயிற்சியில் இது ஒரு முக்கியமான அம்சமாகுமென்பதும் ஆன்மார்த்தப் பயிற்சியில்லாமல் பிற பயிற்சிகளெல்லாம் பயனற்றவை, தீங்குகூட விளைவிக்கக் கூடியவை என்பதும் எனது அபிப்பிராயம்.

நான்காவது ஆசிரமமாகிய சந்நியாச ஆச்சிரமத்திலே தான் சுயானுபவம் சாத்தியம் என்ற மூட நம்பிக்கை இருந்து வருவது எனக்குத் தெரியும். ஆனல் இந்த மதிப்புயர்ந்த அனுபவத்திற்குத் தயார் செய்து கொள்வதை வாழ்வின் கடைசி ஆசிரமத்தை யடையும் வரையில் ஒத்திப் போடுவோர் சுயானுபவத்தை அடைவதில்லை; ஆனல் இரங்கத்தக்க இரண்டாம் குழந்தைப் பருவத்திற்கிணையான முதுமைப்பருவத்தை யடைந்து இப்பூமிக்குச் சுமையாக வாழ்வார்கள். இது சாமானியமாக யாவரும் அறிந்த சங்கதியாகும். ௧௯௧௧-௧௨-ம் வருஷத்தில் நான் கல்வி போதித்துக் கொண்டிருக்கையிலேயே இந்த அபிப்பிராயங்களை நான் கொண்டிருந்ததாக எனக்கு நன்ருய் ஞாபகமிருக்கிறது. என்ருலும் இதே மொழிகளில் அவற்றை நான் சொல்லியிரா திருந்திருக்கலாம்.

அங்ஙனமாக, இந்த ஆன்மார்த்தப் பயிற்சியை எவ்வாறு அளிப்பது? தோத்திரப் பாடல்களைச் சிறுவர்கள் மனனம் செய்து கொள்ளுமாறும் பாடுமாறும் செய்தேன்; ஒழுக்கப் பயிற்சி குறித்த புத்தகங்களின் பகுதிகளை அவர்களுக்குப் படித்துக் கூறினேன். ஆனல் அதனல் எனக்குத் திருப்தியுண்டாகவில்லை நான் அவர்களுடன் இன்னும் நெருங்கிப் பழகிய பொழுது ஆன்மார்த்தப் பயிற்சியைப் புத்தகங்களின் மூலம் அளிக்க முடியாது என்று கண்டேன். உடல் அப்பியாசத்தின் மூலமே உடற்பயிற்சியை அளிக்க வேண்டும்; அறிவு வளர்ச்சிக்கான அப்பியாசத்தின் மூலம் அறிவுப் பயிற்சியை அளிக்க வேண்டும். அவ்வாறே ஆன்மார்த்தப் பயிற்சியும் ஆன்ம வளர்ச்சிக்கான அப்பியாசங்களின் மூலமே அளிப்பது சாத்தியமாகும். ஆன்ம வளர்ச்சிக்கான பயிற்சி உபாத்தியாயரின் வாழ்க்கையையும் குணத்தையுமே முற்றும் சார்ந்திருக்கிறது. தாம் பையன்களுக்கு இடையே இருந்தாலும் சரி இல்லாவிட்டாலும் சரி, தவறான விஷயத்தைப் பேசாமலும் தவறான காரியத்தைச் செய்யாமலும் எப்பொழுதும் உபாத்தியாயர் ஜாக்கிரதையாக இருக்க வேண்டும். பல மைல் தூரத்தில் இருந்து கொண்டிருக்கும் ஒரு உபாத்தியாயர், தமது வாழ்க்கை நெறியின் மூலம் தமது மாணவர்களின் ஆன்மார்த்த வளர்ச்சியைப் பாதிக்க முடியும். நான் ஒரு பொய்யனுயிருந்தால், உண்மையைப் பேசுமாறு மாணவர்களுக்கு நான் போதிப்பது வீணுகும்; கோழையான ஒரு உபாத்தியாயர் தமது பையன்களை வீரர்களாகச் செய்ய முடியாது; புலனடக்கத்தை யறியாத ஒருவர் தமது மாணவர்களுக்குப் புலனடக்கத்தின் மதிப்பைக்குறித்துஒருபொழுதும்போதிக்க முடியாது. எனவே, என்னோடு வாழ்ந்துவரும் சிறுவர்களுக்கும் சிறுமியருக்கும் நானே ஒரு பிரத்தியட்சப்பாடமாக எப்பொழுதும் இருந்துவர வேண்டுமென்று கண்டேன். இவ்வாறு அவர்கள் எனது உபாத்தியாயரானுர்கள்; அவர்களுக்காகவே யாவது நான் ஒழுக்கமுடையவனுகவும் நேர்மையாளனுகவும் இருக்கவேண்டுமென்று கற்றுக்கொண்டேன். டால்ஸ்டாய்ப் பண்ணையில் வரவர அதிகமான ஒழுக்கத்தையும் தன்னடக்கத்தையும் என் மீது நான்சுமத்திக்கொண்டதற்கு என்னிடம்ஒப்படைக்கப்பட்டிருந்த அவர்களே பெரிதும் காரணராவர். அவர்களில் ஒருவன் முரட்டுத்தனமானவன்; 'அடங்காப்பிடாரி'; பொய் சொல்லும் வழக்கமுடையவன்; சண்டைபோடும் வழக்கமுடையவன். ஒரு சமயத்தில் அவன் மிக முரட்டுத்தனமாகக் கிளம்பிவிட்டான். என்னல் பொறுக்கமுடியவில்லை நான் எனது சிறுவர்களை ஒருபொழுதும் தண்டிக்கவில்லை; ஆனல் இந்தத் தடவை நான் மிகுதியும் கோபம்கொண்டேன். நான் அவனுடன் வாதிக்க முயன்றேன். ஆனல் அவன் மிகப் பிடிவாதமாக இருந்தான்; அவன் என்னை ஏய்த்துவிடக்கூட முயன்ருன். கடைசியாக, கைபக்கத்தில் கிடந்த ஒரு 'ரூல்' தடியை எடுத்து அவனது புயத்தில் ஒரு அடி கொடுத்தேன். நான் அவனை அடித்தபொழுது, என் உடலம் நடுங்கியது. அதை அவன் கவனித்திருப்பானென்றே நான் கருதுகிறேன். அவர்கள் யாவருக்கும் இது முற்றிலும் புதியதொரு அனுபவமாயிருந்தது; அந்தப் பையன் அழுது, மன்னிக்கும்படியாக இரந்தான். அவன் அழுதது அடி பட்டு நொந்ததினலன்று; அவன் பதினேழு வயதுடைய தேகக் கட்டுடைய ஒரு இளைஞனுயிருந்தபடியால், அவன் எண்ணியிருந்தால் எனக்கு பதிலுக்குப்பதில் அடிகொடுத்திருக்கலாம்; ஆனல், இந்தப் பலாத்கார முறையை நான் கைக்கொள்ள வேண்டிவந்ததற்காக எனக்குண்டான வருத்தத்தை அவன் உணர்ந்து கொண்டான். இந்தசம்பவத்திற்குப் பின்னர் ஒருபொழுதும் அவன் எனக்குக் கீழ்ப்படியாமல் நடந்ததில்லை. ஆனலும், அந்தப் பலாத்காரத்திற்கு நான் இன்றும் மனம் வருந்துகிறேன். எனக்குள்ளிருக்கும் ஆன்மசக்தியையன்று ஆனல் எனக்குள்ளிருக்கும் மிருகத் தன்மையையே நான் அன்று அவன் முன்னே வெளிப்படுத்தினேனே என்று அஞ்சுகிறேன்.

அடித்தல் என்ற தண்டனை விதிப்பதை எப்பொழுது நான் எதிர்த்து வருகிறேன். ஒரே ஒரு சந்தர்ப்பத்தில் எனது மக்களில் ஒருவனை அடித்துத் தண்டித்ததாக மட்டில் எனக்கு ஞாபகம் இருக்கிறது. ஆதலினல், 'ரூல்' தடியை நான் உபயோகித்தது சரியா தவறு என்பதைத் தீர்மானிக்க இன்றுவரையில் என்னல் முடியவேயில்லை. அது கோபத்தாலும் தண்டிக்க வேண்டுமென்ற ஆசையாலும் தூண்டப்பட்டதாதலின் தவறுயிருக்கலாம். எனது வருத்தத்தை மட்டிலும் அது வெளிக்காட்டியதாயிருந்திருப்பின் அது நியாயமானதென்று நான் கருதியிருப்பேன். ஆனல் இந்த விஷயத்தில் நோக்கம் கலப்பானதாயிருந்தது. அந்தச் சம்பவம் என்னைச் சிந்திக்கச் செய்தது. மாணவர்களைத் திருத்துவதற்கு அதைவிடச்சிறந்ததொரு வழியை அது கற்றுக்கொடுத்தது. பிரஸ்தாப சந்தர்ப்பத்தில் அந்தவழி எவ்வாறு பயன்பட்டிருக்கும் என்பது எனக்குத் தெரியாது. அந்த நிகழ்ச்சியை அவ்விளைஞன் சீக்கிரம் மறந்து விட்டான்; அவன் பெருத்த அபிவிருத்தியைக் காட்டியதாக நான் நினைக்கவில்லை. ஆனல், அந்த நிகழ்ச்சி ஒரு உபாத்தியாயர் தமது மாணவர்களுக்குச் செய்ய வேண்டிய கடமையைப் பின்னும் நன்ருக நான் உணர்ந்து கொள்ளுமாறு செய்தது. இதற்குப் பின்னரும் மாணவர்கள் ஒழுக்குமீறி அநேகம் தடவை நடந்து கொண்டதுண்டு; ஆனல், அடித்துத் தண்டிப்பதை நான் ஒருபொழுதும் கைக்கொள்ளவில்லை. ஆனல் எனக்குக் கீழிருந்த சிறுவர் சிறுமியருக்குஆன்மார்த்தப்பயிற்சியளிக்க, நான் எடுத்துக் கொண்ட முயற்சி காரணமாக ஆன்ம சக்தியைப் பின்னும் பின்னும் நன்ருக உணர்ந்து கொள்ளலானேன்.

---

### "நன்றிமறவாமை"

யுத்த காலத்தில்.

பிரிட்டன்:—என்னே! இந்த இந்திய நண்பர்களின் உள்ளன்பும் விசுவாசமும் தான் என்னே! நமது தாயகம் ஆபத்தில் அகப்பட்டுக் கொண்டுள்ள இந்நாள் அவர்கள் செய்யும் உதவிக்குக் கைம்மாறும் உண்டோ! உலகம் உள்ளளவும் இந்நன்றியை நாம் மறவோம்.

இப்பொழுது.



பார்க்கன்ஹெட் கம்பெனியார்:—நாமும் கடவுளும்தான் இந்தியாவைப் பற்றிக் கவலையெடுத்துக்கொள்ள வேண்டும். இந்தியா தனது சொந்தத்தலைவிதியைநிர்ணயித்துக்கொள்ளவிடாது அதைவைத்து வால் நாம் கடவுளுக்குச் செய்யவேண்டிய தொண்டல்லவா? நாம் கடவுளுக்கே முதலில் நமது கடமையைச் செலுத்த வேண்டும்; பின்னரே, மனிதனுக்கும் சுதந்தரத் தெய்வத்துக்கும் நாம் கடமை செலுத்தலாம்.

---

### காரைக்குடி

#### ஹிந்துமதாபிமான சங்கம்.

இச்சங்கத்தின் ஆதரவில் இம்மீ உ௩-ம் நாள் திங்கட்கிழமை மாலை மணிக்கு விவேகானந்த ஸ்வாமிகள் அறுபத்தாறுவது பிறந்தநாள் கொண்டாட்டம் காரைக்குடி இன்கமடாக்ஸ் ஆபீஸர் திருவாளர் எஸ். இலக்ஷ்மண சாஸ்திரியாரவர்கள் தலைமையில் நடைபெற்றது. திரு. அரு. சோமசுந்தரம் செட்டியார், திரு. தி. ம. நடராஜன், ஆகிய அன்பர்கள் பேசினர்கள் ஒரு திருப்பர் எழுதினர்.

ஊழியன்

மன்னவர் தமக்கும் அஞ்சேன்
மாண்பெரும் நாட்டிற் காக
என்னுயிர் தனையும் ஈவேன்
எதற்குமியான் யாண்டும் அஞ்சேன்
பன்னரும் பாரதத்தாய்
பண்டைவாழ் வெய்தப் பாரில்
ஒன்னலர்க் கஞ்சா நல்ல
ஊழியம் தலைமேற் கொண்டேன்.


ஊழியன் காரைக்குடி
பிரபவ-ஞு தை-மீ ௨௬


# முழு விடுதலை.

உலகத்துள்ள நாடு அனைத்தும் முழு விடுதலை பெற்று வாழ வேண்டுமென்பதை நடுநின்று நோக்கும் எந்நாட்டவரும் மறுக்கத் துணியார் என்பது உறுதி. எனவே இந்தியாவும் முழுவிடுதலை வேண்டி நிற்பதில் பிழையொன்றுமில்லை. அவ்வாறு செய்தல் அதன் கடமையாகும். இத்தனை ஆண்டுகளாக இம் முழு விடுதலையை இந்தியாவின் பிரதிநிதி சபையாகிய காங்கிரஸ் வேண்டித் தீர்மானித்திலது. சென்னைக் காங்கிரஸ் இத்தீர்மானத்தை ஆற்றியது. சுதந்தரமுள்ள வேறு பல நாடுகளைப் போல இந்தியாவும் எந்நாட்டிற்கும் உட்படாத சுதந்தரத்தையே விரும்புகின்றது எனச் சென்னைக் காங்கிரஸ் தீர்மானித்தது. காங்கிரசுக்குச் சம்பந்தப்பட்டதும் படாததுமான வேறு பல பொருள் தலைவர்களை இதிற் கொணர்ந்து புகுத்தி இடர்ப்படாமல், இந்தியா முழு விடுதலை வேண்டுவது சரியா தவறா என ஆராய்ந்தால் தவறு எனச் சாற்றுதல் பொருந்தாதென்றே நாம் உணர்கின்றோம்.

ஒவ்வொரு நாடும் முழுவிடுதலையொடு வாழ வேண்டுவது விதி. இதனை இவ்வாரத்திய இளமை யிந்தியாவில் காந்தியடிகள் எழுதியிருக்கின்றார்கள். இம்முறையில் இந்தியா மட்டும் ஏன் முழுவிடுதலைத் தீர்மானஞ் செய்தலாகாது. இந்தியாவுக்குஇன்றைக்கு அது அசாத்தியம் என்பதற்காக இத் தீர்மானத்தை மறுப்பது நியாயமாகுமா? இந்தியாவின் வாழ்வைநாடுங் காங்கிரஸ் எவருக்கும் தொடர்பில்லாத ஆட்சியே எங்கள் நோக்கம் எனத் தீர்மானிப்பதில் என்ன பிழை. இதில் இவ்வளவு விவாதம் எழுவதற்கும் காந்தியடிகளும் இத் தீர்மானத்தை மறுப்பதற்கும் வருந்தாமல் இருக்க முடியவில்லை. காந்தியடிகள் இவ்வாரம் எழுதியிருப்பதிலிருந்து இத்தீர்மானத்தின் தத்துவத்தை அவர் மறுக்கவில்லையென்று வழுத்தலாம். சொற்களையும் பிறவற்றையும் பற்றி அவர் பேசுகிறார். அன்றி வேறு சில பொருள்களும் அவர் விளம்பியிருக்கின்றார்.

பர்க்கன் ஹெட்டுக்கு இத் தீர்மானம் பதில் எனச் சிலர் சொல்லுவதாகவும், அதற்குப் பதில் இதுவாகாதெனவும், துணிகளைத் தீகொளுத்துதல் ஒருவாறு பதிலாகுமெனவும், அன்றி அரசாங்க உத்தியோகம் பார்ப்போர் வேலை நிறுத்தம் செய்தல் நல்ல பதிலாகுமென்றும் பிறவும் அடிகள் எழுதியிருக்கின்றார் "இந்தியரைச் சிறிதும் மதியாது கமிஷன் நியமித்த உங்கள் தொடர்பு எங்கட்கு வேண்டாமென்று விளம்புவது ஏன் பதில் ஆகாது" என்று கூறுவார் ஒரு சாரார். நாம் அவ்வாறு விவாதிக்க விரும்பவில்லை. பதிலைப்பற்றிய பேச்சே முழு விடுதலைத் தீர்மானத்தில் வேண்டுவதில்லை. பதிலாகட்டும்; ஆகா தொழியட்டும். இந்தியாவின் விருப்பம் முழு விடுதலை யென்று தீர்மானிக்கக் கூடாதா? பிறரை பயப்படுத்துதற்காக இத் தீர்மானம் செய்ததாக நாம் கொள்ள வேண்டுவதின்று. தீர்மானங்கொணர்ந்த பண்டித ஜாவேரிலால்நேரு கூறுமாறு பன்னாள் எண்ணமே தீர்மானிக்கப் பட்டிருக்கிறது.

காந்தியடிகள் கூறுவதுபோல் துணிகளை எரிப்பதென்றோ அன்றி உத்தியோகஸ்தர் வேலையைவிட வேண்டுமென்றோ காங்கிரசில் ஒரு சிறு பேச்சும் எழுந்ததாகக் காணவில்லையே. இவற்றை ஏன் யாரும் பேசவில்லையோ? உத்தியோகத்தரெல்லாம் வேலையை விடுப்பதென்று தீர்மானித்துச் செயலிற் காட்டினால் நாட்டின் விடுதலைக்கு அதை விடச் சிறந்தது காண்டல் அருமை என்பதை எவரும் மறக்க முடியாது. இது என்றும் அறிந்ததே. இவ்வாறு தீர்மானித்தும் விடலாம். ஆனால் செயல்?..........

நல்லவர் கூறியும் தீர்மானித்துவிடலாம். செயல் என்று கேட்கும் பொழுது பதில் சொல்வது கஷ்டமாகவே இருக்கிறது. செயலாளர் வேண்டும். அவர் பலரின்மையாலேயே செய்தவற்றிற் கெல்லாம் எல்லோரும் விவாதம் தொடங்க நேர்கின்றது.

முழு விடுதலை இந்தியாவுக்கு வேண்டும். அத் தீர்மானத்தை நாம் வரவேற்கின்றோம். அத் தீர்மானத்தின் கருத்து நிறைவேற ஆவனபுரியவேண்டுவதைக் காங்கிரஸ் கடமையாகக் கொள்தல் வேண்டும். முழு விடுதலைத் தீர்மானத்தின்மேல் காந்தியடிகள் எழுதியதும் அதைப்பற்றிப் பண்டித ஜவேரிலால் நேரு எழுதியதும் எட்டாம் பக்கத்தில் வெளியிடப் பட்டிருக்கின்றன. காந்தியடிகள் கூற்றில் கூர்ந்து நோக்கின் இத் தீர்மான சம்பந்தப்பட்ட மட்டில் மாறுபாடு மிகுதியில்லை. செயலில்லா நிலையில் இத் தீர்மானம் வேண்டாமென்பதே அவர் முக்கிய கருத்தென்று கொள்ள வேண்டியிருக்கிறது. திரு. ஜவேரிலால் நேரு சென்ற வாரம் அடிகள் எழுதியதை மறுத்திருக்கிறார். ஜவேரிலாலின் கருத்துச் சென்ற கிழமை நாம் எழுதியதை அரண் செய்து நிற்கின்றது. காந்தியடிகள் இத்தீர்மானத்தை ஆதரித்து எல்லோரையும் செயலில் இழுக்கும் துறையில் இறங்கியிருந்தால் நன்றாக இருக்கும்.

காங்கிரஸ் நல்லார் கையிலில்லையெனக் குறை கூறுகிறார் சில அன்பர். இவ்வாறு குறை கூறுதல் அவமானம். காங்கிரஸைக் கைப்பற்ற எல்லோர்க்கும் உரிமை யுண்டு. அவ்வேலையைச் செய்யலாம். அதற்கு ஆற்றலில்லையானால் என் செய்வது. ஆட்டுவார் வழி அது ஆடத்தான் செய்யும். ஐயோ! அப்பா! என்பதால் என்ன பயன்? அதனை மனத்திற் கொண்டு காங்கிரஸ் செய்யும் தீர்மானங்கள் எல்லாவற்றையும் வெறுத்துப் பேசுகின்றார் ஒரு சிலர். இது நல்ல முறையன்று. எவர் செயலாயினும் நல்லது நல்லதே; கெட்டது கெட்டதே.

இந்நாள் காங்கிரசை இயக்கும் கூட்டத்தார் செயலில் பலவற்றை நியாயமுறையில் வெறுப்பவருள் நாமும் எவருக்கும் பின்னிற்கப் போவதில்லை. அதன் பொருட்டு நல்லதையும் மறுக்க முடியுமா? காங்கிரசில் சேர்ந்தாரில் சிலரோ பலரோ தவறு செய்தால் அதன் பொருட்டுக் காங்கிரசைக் கொன்றுவிடலாமா? இந்தியாவுக்கு விடுதலை தாவல்லது காங்கிரசே. அதன் போக்கை நன்றாக்கி முழுவிடுதலை பெற முயல வேண்டுவது நாட்டன்பர்கடன். திருத்தவே முடியா நிலையில் காங்கிரஸ் தவறச் சென்றாலன்றிக் காங்கிரசை வெறுத்தல் நாட்டன்பருக்கு அறமாகாது. ஒத்துழையாக் காலத்துக் காங்கிரஸ் பெற்ற மதிப்பை மீண்டும் பெறுமாறு செய்தல் வேண்டும். அரசியல் கமிஷன் அடுத்தமாதம் வந்திறங்கப்போகிறது. இந்தச்சமயத்தில் நமக்குச் சொற்போர் வேண்டாம். வேண்டுவது செய்கை! செய்கை!! செய்த தீர்மானங்கள் செவ்வையாகச் செய்கையில் நிற்குமானால் முழு விடுதலை அரிதன்று.

---

## தவறான முறை.

தாழ்ந்தவர் என்று கருதப்படும் வகுப்பாருக்கு இழைக்கப்படும் அநீதி இந்த சமூகத்துக்கே பெரிதும் அவமானம் தருவதாகும் என்பதை அகன்ற நோக்கும், அறிவும் படைத்த எவரும் ஒப்புக்கொள்ளுவர், ஒப்புக்கொண்டிருக்கின்றனர். மனிதனுக்குள் பிறப்பால் உயர்வும் தாழ்வும் கிடையாது, இருக்க முடியாது. ஆனால், மனிதன் செயற்கையால் உயர்வும் தாழ்வும் படைத்துக் கொள்ளுகின்றான் என்பது மட்டில் மறுக்க முடியாததாகும். பிறப்பில் யாவரும் சமம் என்பதற்குப் பொருள், பிறப்புப் பற்றித்தனித்த விசேஷ உரிமைகளாவது, விசேஷத் தடைகளாவது எவருக்கும் விதித்தலாகாது என்பதுதான்; அவரவர் தத்தம் முயற்சியால் எழுவதையும் வீழ்வதையும் இது எவ்விதத்தும் கட்டுப்படுத்தாது என்று சுருக்கமாகக் கூறிவிடலாம்.

குறிப்பிட்ட ஒரு சில நபர்கள்—வகுப்பார் என்றுகூற நமக்கு விருப்பமில்லை—சில தடைகளுக்கு, அவர் பிறப்பின் சந்தர்ப்பங்கள் காரணமாக உட்படுத்தப்படுவது பெரிதும் வெறுக்கத்தக்கதாகும். அன்னார் தம் தடைகளை முறித்தொழித்துத் தம் குறைகளைத் தீர்த்துக் கொள்ள எழும் முயற்சியில் பிறரும் அவருடன் ஒத்துழைத்து உதவிசெய்ய வேண்டுவதேயாகும். எனவே அவர்கள் பிறர் உதவியை நாடுவதும், பிறர் அவர்க்குதவி புரிய வேண்டியதும் இயல்பேயாகும். ஆனால், அக் குறிப்பிட்ட கூட்டத்தார், தங்கள் முன்னேற்றத்துக்கான உதவியைத் தேடும்பொழுது, எச்சரிக்கையுடனும், நல்லெண்ணத்துடனும், எந்தத் திசையினின்றும் தமக்குத் தடைகளும் குறைகளும் வருகின்றனவோ, அத்திசையின்—அம்மனிதர்களின—போக்கில், உளமாற்றத்தை விரும்பியும் ஏற்ற முறையைக் கைக்கொள்ளுவதுதான் பரஸ்பர நன்மையையும் நிரந்தரமான பலனையும் தருவதாகும். அதைவிட்டு, சந்தேகத்தை அடிப்படையாகக் கைக்கொண்டு, பொதுவிரோதியின் ஆதரவைப்பெறத் தேடுவது, பரஸ்பரம் கஷ்டமேயாகும் என்பதை அவர்கள் உணர்ந்துகொள்ள வேண்டும்.

சென்ற வாரத்தில் சென்னை மாகாணத்தில் மூன்று இடங்களில் ஆதித்திராவிடர் மகா நாடு நடைபெற்றிருக்கிறது. ஒவ்வொரு மகா நாட்டின் நிகழ்ச்சியையும் படித்துப் பார்க்கும் பொழுது நமக்கு வருத்தமே உண்டாகிறது. ஒவ்வொரு மகாநாட்டிலும், 'இந்த மகாநாடு அரசாங்கத்தை வேண்டிக் கொள்ளுகிறது' என்ற பல்லவியைக் கொண்டிராத தீர்மானம் ஒன்றுகூட இல்லையென்றுகூறிவிடலாம்; 'அரசாங்கமே தமக்குத் தஞ்சம் என்பதே அவை ஒவ்வொன்றின் நிகழ்ச்சிகளுக்கும் சுருதியாக இருந்திருக்கிறது. நாட்டுப்பற்றுக் கொண்ட எவருக்கும் இது உள்ளத்தில் வருத்தத்தை உறுவிக்கும் என்பது நிச்சயம் இந்தியஜனங்களை—காந்தியடிகள் கூறுவதுபோல-'நடைப்பிணங்களாக'ச் செய்துள்ள இந்தச் 'சைத்தான்' அரசாங்கத்துக்குப் பிரார்த்தனை செய்து கொள்தலென்பது, எவருக்கும் முன்னேற்றத்தை நல்கிவிடும் என்று நாம் கருத முடியவில்லை. அதுவும், நாடு முழுவதும் கொதிப்படைந்திருக்கும் இந்தச் சமயத்தில், இந்தியாவின் தலைவிதியை நிர்ணயிக்கப் பிரிட்டன் உரிமை கொண்டாடிக் கமிஷன் நியமித்திருக்கும் இந்தச் சமயத்தில், 'பகிஷ்காரம்' 'பகிஷ்காரம்' என்று எவரும் முழக்கம் செய்யும் இந்தச் சமயத்தில் ஒரு சிலர் அரசாங்கத்தை வரன்கள் கேட்பது அவர்கட்கும் நலன் பயப்பதல்ல, நாட்டுக்கும் நலன்பயப்பதல்ல.

இந்த மூன்று மகாநாடுகளின் நிகழ்ச்சிகளையும் தனித்தனி விரித்துவரைய நாம் விரும்பவில்லை, அது தேவையுமல்ல. இவற்றில் ஒன்றின் வரவேற்புத்தலைவர் கூறும் சில மொழிகள் நமக்குச் சிறிதும் பிடிக்கவில்லை. அவ்வன்பர், பிரிட்டிஷாரே ஆதித்திராவிடருக்குக் கண்திறந்துவிட்டதாகக் கூறுகிறார். இது பள்ளிக்கூடக் குழந்தைகளுக்குத்தான் விளங்கும்; பிற எவருக்கும் விளங்காது. சமீபத்தில் கூடிய காங்கிரஸ் தீண்டாமை யொழித்தல் குறித்து யாதும் தீர்மானங்கள் நிறைவேற்றவில்லை யெனவும், முஸ்லீம்கள் மதப்பித்தும் பலாத்காரமும் பிடித்தவர்களாதலின் இந்து—முஸ்லீம் தீர்மானம் நிறைவேறியதென்றும், ஆதித்திராவிடர் சட்டத்துக்குக் கீழ்ப்படிந்து சாதுவாய் வாழ்வோராதலின் அவர்களைக் குறித்துக் கவலை கொள்ளவில்லை என்று பொருள்படவும் அவர் கூறுகிறார். காங்கிரஸ் ஒவ்வொரு ஆண்டும் தீர்மானம் செய்து கொண்டிருப்பதால் மட்டில் யாதும் பயனில்லை என்பது நமது கருத்து. மேலும், காங்கிரஸினின்றும் ஒதுங்கி நின்றுகொண்டு அரசாங்கத்துக்கு வேண்டுகோள் செய்வதைவிட்டு, காங்கிரஸை—நாட்டின் பெருத்த அரசியல் ஸ்தாபனமாகிய அதை—தம் வழிக் கொணர, நியாயமான கட்சியுடைய எவரும் முயலலாம். காங்கிரஸ் என்பது தனித்த ஒரு மனிதனல்ல. மேலும், இந்தியரை நியமிக்காததற்காக அரசியல் கமிஷனைப் பகிஷ்கரிக்க வேண்டுமென்று சொல்லப்படுவதாகவும், இந்தியரை நியமித்திருந்தால்தான் ஆதித்திராவிடர் அதைப் பகிஷ்கரிக்க வேண்டியிருக்கும் என்றும் அவர் நவில்கிறார். பிரிட்டிஷ் பார்லிமெண்டுக்கு இந்தியாவின் அரசியல் அமைப்பை நிர்ணயிக்க உரிமையில்லை என்ற கட்சியைக்கொண்டே அநேகமாகப் பகிஷ்காரம் வேண்டப்படுகிறது என்பதை அவ்வன்பர் உணர வேண்டும். மேலும், அவர் கூறுவதைச் சரிபாகவே வைத்துக்கொள்ளினும், தமது சகோதரர்களான இந்தியரிடமிட, இவ்விடத்தினின்றும் வெகு தொலைபிலுள்ள, இந்தியர் பழக்க வழக்கங்களை உணராத, இந்தியாவைத் தன் விற்பனை ஸ்தலமாகக் கருதிவரும் ஒரு நாட்டியுள்ள, இந்தியாவின் இரத்தத்தைப் பலவகையிலும் உறிஞ்சிவரும் ஒரு தேசத்திலுள்ள மனிதரிடம் அதிக நம்பிக்கையை எப்படி அவர் வைக்கக் கூடும் என்பதும் நமக்கு விளங்கவில்லை. சமுதாயத் தீமைகள் பலவற்றுக்குத் தனி மனிதர்கள் காரணமல்ல; பழையவும், குருட்டுத்தனமுமான சில மூட வழக்கங்கள் காரணமாக எழுந்த சமூகத் தீமைகளை யொழித்துக் கொள்ளுவதற்கு அந்நியரது உதவியைப்பெறத் தேடுவது விரும்பத்தக்கதல்ல. எனவே, சமூகத்தீமைகளை அனுபவிப்போர் தங்கள் குறைகளை ஒழித்துக் கொள்ளப் பிரிட்டிஷ் அரசாங்கத்தின் உதவியைப் பெற முயல்தல் நல்ல முறையல்ல என்பதே நமது கருத்து. நிற்க, அவர்களை மட்டிற் குறைகூறிப் பயனில்லை. அவர்களிடம் அனுதாபம் காட்டி, அவர்களது முற்போக்கு முயற்சியில் ஏனைய வகுப்பாரும் பெரிதும் பங்கெடுத்துக் கொள்ளாதிருப்பதே அவரது மனக் கசப்பிற்குப் பெரிதும் காரணமாகும் என்பதையும் இங்குக் குறிப்பிட விரும்புகிறோம்.

---

## இடிமுழக்கம்.

### புதுப்பாளைய ஆசிரமம்.

புதுப்பாளையம் காந்தி ஆசிரமத்தின் அறிக்கை கிடைத்திருக்கின்றது. ஆசிரமம் ௧௯௨௫-ம் ஆண்டு பிப்ரவரி மீ ௬-௨ துவங்கப்பட்டது. கதர்த்தொண்டிலேயே அது முக்கியமாய்க்கவனம் செலுத்தி வருகிறது. இந்த இரண்டரை வருஷகாலத்தில் அது நல்லவேலை செய்திருப்பதாய்த் தெரிகிறது. இந்த இரண்டரை ஆண்டில், க,௭0,௮௯0 இராத்தல் நூலும், ரூபாய் ௨,௨௬,0௬௯ பெறுமான கதரும் இதில் உற்பத்தியாயிருக்கிறது. ௨,0௨,0௯௮ ரூபாய்க்கு அது விற்பனை செய்திருக்கிறது. ஆசிரமத்தின் மொத்தச் செலவு ரூ க,௩௯௯,௯௬௮ ; இதில் நூற்றுக்கு அடு, நூற்போர், நெய்வோருக்கும், கூலி ஆசிரமத் தொண்டருக்கும், மிகுதி பிறவற்றுக்கும் செலவழிக்கிறது. பொதுவாக இந்த ஆசிரமம் கதர்த்துறையில் நல்ல தொண்டாற்றியிருக்கிறது என்று சந்தோஷத்துடன் இங்குக் குறிப்பிட விரும்புகிறோம்.

### இரண்டுக்கும் வெகுதூரம்.

இராணுவங்களை மேல்நாடுகள் அதிகப்படுத்துகின்றன. தினந்தோறும் தினசரிப் பத்திரிகைகளைப் பார்க்கும் பொழுது, அநேகமாக, 'அமெரிக்காவின் கப்பற் படைத் திட்டம்', 'பிரிட்டிஷின் ஆகாயப் படைத் திட்டம்' என்பன போன்ற செய்திகள் வாராத நாட்கள் இல்லையென்று கூறலாம். படையை அதிகரிப்பானேன், யுத்த நோக்கமா எனில், அல்லவென்றும், ஆனால் தயாராயிருந்து விட்டால் யுத்தம் கிடமாதென்றும் வாதம் செய்யப்படுகிறது. அது பற்றியதொரு அழகியகட்டுரை எமிலிசிரின் பால்ச் என்பவரால் 'தி வோர்ல்டு டுமாரோ' (நாளையுலகம்) என்னும் பத்திரிகையில் எழுதப்பட்டிருக்கிறது. டாமி என்னும் சிறுவன் கையில் ஒரு பெருந்தடியைவைத்திருக்கிறான்; சாம்மி என்னும் சிறுவன் எறிவதற்காக, தன் சட்டைப்பையிதுங்க நல்ல கற்களை அடைத்து வைத்துக் கொண்டிருக்கிறான்; சண்டை நடவாமலிருக்க வேண்டும் என்ற நிச்சயம் வேண்டியதற்காக, அவற்றை வைத்திருப்பதாக, இருவரில் ஒவ்வொருவனும் கூறுகிறான்—இந்தச் சிறுவர்களைக் குறித்து நாம் எப்படி நினைப்போம்? இருவரும் எந்த நிமிஷமும் 'குஸ்தி' யை எதிர்பார்த்துக் கொண்டேயிருக்கிறார்கள் என்றுதான் நினைப்போம். இராணுவக் கைவிருப்புக்கும், சமாதானத்துக்கும் வெகு தூரமேயாகும்.

### 'குருட்டு நம்பிக்கையே!—'

நேபாளமந்திரியின் மருமகனான ராஜா ஜெய பிரிதிவி பகதூர் சிங் என்பார் ஆங்கிலநாடு செல்லப்போகிறார். அவர் அங்கு சென்று, தாம் விசாரம் செய்துள்ள ஒரு வேதாந்த நூலை அங்கு வெளியிடப் போகிறாராம். தமது கண்ணேய்க்கும் வைத்தியம் பார்த்துக் கொள்ளப் போகிறார். இது அவர் ஐரோப்பாசெல்வதன் நோக்கமாகக் கூறப் படுகிறது. கண்ணேய் வைத்தியம் பார்த்துக் கொள்வதற்காகப் போவது இயல்பே. வேதாந்தத்தைப் பற்றிய ஓர் புத்தகத்தை வெளியிட அந்நாடு செல்ல வேண்டிய தேவை ஏற்பட்டதுதான் இதில் அதிசயிக்கத்தக்க சங்கதியாகும். ராஜா அவர்கள் இரகசியமாக வெளிக்கிளம்பி, மேலூடு செல்லுகிறார் என்பதையும் இதுகூட சேர்த்து யோசிக்க வேண்டும். தேசாந்திரம் சென்றால் பாபம் ஒட்டிக்கொள்கிறதும் என்ற மூட நம்பிக்கைநேபாளத்தில் உலவி வருவதுதான் அதன் காரணமாகச் சொல்லப் படுகிறது. மேலூடு செல்ல விரும்பும் அவர் சிந்தித்துள்ள வேதாந்தம் அகன்ற நோக்கம் படைத்ததாயிருக்க வேண்டும் என்று ஊகிக்கலாம் அவர் வெளிநாடு செல்வதற்கே இடந்தராத சந்தர்ப்பங்களைக் கொண்டிருக்கும் மூடநம்பிக்கை அவரது தத்துவவிசாரக் கருத்துக்களின் வெளியீட்டுக்கு எப்படி இடந்தரும்? எனவே, அவர் தம் ஊரைவிட்டுச் சென்று தம் கருத்தை வெளியிட வேண்டியவர்திருக்கிறது. குருட்டு நம்பிக்கையே, உனது ஆதிக்கக் கொடுமையின் வலிமைதான் என்னே!

### தீர மங்கை.

தேம்ஸ் நதியில்பெருத்த வெள்ள மெடுத்துப் பலத்த உயிர்ச்சேதமும் பொருட்சேதமும்லண்டனில் நிகழ்ந்ததாகச் சென்றவாரச் செய்திகளிற் காணப்படுகின்றது. இதில் ஒரு இருபது வயதுச் சிறுமியின் தீரச்செயல் ஒன்று பெரிதும் போற்றத் தக்கதாகும். கன்னி பிராங்கிஸ் இரவில் விழித்துக் கொண்ட பொழுது, தனது அறையில் தண்ணீர் நிறைந்திருப்பதைக் கண்டாள். உடனே வீட்டிலுள்ளார் யாவரையும் எழுப்பினள். ஒரு ஜன்னல் வழியே வெளியே குதித்து வெள்ளத்தில் நீந்திச் சென்றாள். மேன்மாடியிலிருந்து ஒருவர் ஒரு துணியைத் தொங்கவிட்டு, அதின் வழியாக மேலே யேறித் தப்பித்துக் கொள்ளுமாறு கூறியிருக்கிறார். அவள் அதை மறுத்துவிட்டு, தனது வீட்டுக்குள் இரண்டு முறை திரும்பத் திரும்பச் சென்று தன் சொந்தக்காரச் சிறுவனொருவனையும் மற்றுமொரு உறவினனையும் காப்பாற்றினள். முற்றும் சலித்துப்போன பின்னரே, மேலே தூக்கிவிடப் பெற்றாள். அதுவரை, தான் தப்பித்துக் கொள்ளவேண்டுமென்பதற்கு அவள் இசையவில்லை. அவளது கால்களும் கைகளும் காயம் பட்டுப் போயின. அதனால், அவளை உடனே ஆஸ்பத்திரிக்குக் கொண்டு செல்லவேண்டி வந்தது. கன்னிபிராங்கிஸ் அவர்களின் தீரத்தை யார்தான் போற்றாமலிருக்க முடியும்? தனது உயிரைப் பெரிதாய்க் கருதாமல், தொண்டையும் உதவியையும் செய்யும் மனிதர்கள் உலகில் இருப்பதால்தான் உலகம் முற்போக்கு எய்துகிறது. தொண்டு சிறிதாயினும் பெரிதாயினும் தியாக மனப்பான்மை ஒன்றுதான் என்பதையும் இங்குக் குறிப்பிட வேண்டும்.

### இன்னுமா மிரட்சி?

கதர் துவங்கிய பொழுது, அதைக்கண்டு பலர் மிரட்சிகொண்டனர். கதரும் ஒரு துணிதானே யெனினும், அரசியல் இயக்கத்தோடு அதன் பெயர் கலந்தும், புதிதில் அதில் மிரட்சி ஏற்பட்டது ஓரளவு இயல்புதான் என்றே கூறலாம். ஆனால், அந்த மிரட்சி இன்னும்—கதர் எளியவர் இயக்கம் என்ற உண்மைபரவி வரும் இன்றும்—சிலரிடம் இருந்து வருவதுதான் விநோதம். "நாளர் ராஜ்ஜன்" என்னும் பத்திராதிபரான திரு. எர்ல எங்பவர் ஜோட்பூர் ரயில்வே ஸ்டேஷனில் இறங்கிய பொழுது, அவரது பெட்டையும் வேறு சில விபரங்களையும் ஒரு போலீஸ்காரன் கேட்டானாம். காரணம் அவர் கதர் குல்லாய் அணிந்திருந்ததுதான். "ஜோட்பூர் சட்டம்ஒன்றும் மீடையாது. நீங்கள் நருக்கம் பண்ணிகிர்களோனும், நீங்கள் போலீஸ் 'லாக்-அப்'புக்கு அனுப்பப் படுவீர்கள்" என்று அவன் பயமுறுத்தினான். தன் உடுத்த வெள்ளியரசிப் பத்தி சம்பந்தமான அதிகாரிகளுக்கு அறிவித்த பிறகுதான், ரயில்வே அதிகாரிகள் கடுமையாய்க் கண்டிக்கப் படுவார்களாம். இது உண்மையாயின், தேசிய ஒரு சமஸ்தானம் இவ்வாறு இன்றும் மிரட்சி கொண்டிருப்பதைக் கேட்பது வருத்தம் தரத்தக்க செய்தியேயாகும். இந்திய அரசியல் இயக்கத்துக்கும் தங்கள் வாழ்வுக்கும்முரண்போல எண்ணிக் கொள்ளத் தக்க மனப்பான்மை சமஸ்தானதிபர்களுக்கு உண்டாக்கப் பட்டிருக்கிறது. கதர், எளியவர் நன்மைக்கானது என்பதை உணராது அரசியல் பொருளே அதற்குக் கொள்ளப் பட்டிருக்கிறது. இதுதான் அந்தச் சமஸ்தானத்தின் இச்செயலின் பொருள். எவ்விதமாயினும் கதர் ஏழைகளின் பக்கமாயிருப்பதுதான் தங்கள் சமஸ்தானங்களுக்கு நலமாகும் என்பதை அவர்கள் உணர வேண்டும்.

### ஓடிவாழவேண்டுமோ?

இந்தூர் மன்னர் பெயர் எங்கணுமே பிரபல மடைந்திருப்பது தான். பாவ்லாகொலைவழக்கில், இந்தூர் மன்னரின் பெயர் அடிபட்டது அன்பர்களுக்கு அதற்குள் மறந்திருக்குமா? இப்பொழுது, அவர் ஒரு அமெரிக்கச் சீமாட்டியை—மில்லர் என்னும் கன்னியை—மணக்கப்போகிறாராம். ஆம்மங்கையோ குறித்தவை இந்திய மன்னரொருவர் மணந்தாலாகாது என்று நாம் கூறவில்லை. காதல் மணத்தில் அத்தகையை கட்டுப்பாடுகள் யாதும் இருந்தலாகாது, இரா என்பதே நம் கருத்து. ஆனால், ஏற்கனவே இரண்டு மனைவிகளைப்படைத்திருப்பவர் இவர்; முந்தி முடிசூட்டிக் கொண்ட அரசுரிமை விடுத்த பாவ்லாக் கொலைவழக்கில் பெயர் அடிபட்டு, தனது அரசபதவியையும் இழந்தவர். இப்பொழுது, அமெரிக்கப் பெண்ணொருத்தியைப் பிடித்திருக்கிறார். மில்லர் என்னும் கன்னிகை மெருக்கமைதலை சேர்க்கவல்லவா? மெருக்கமைதத்தில் ஒரு மனைவியோ மனைவியோ இருக்கும்பொழுது, இன்னொரு மனைவியோ மனைவியோ மணக்க கொண்டால், அது செல்லாது என்பது கன்பர்களுக்குத் தெரிந்திருக்கும். எனவே, கன்னி மில்லரை இந்து மதத்திற்கு மாற்றி, மணம் நடக்கப்போகிறதாம் மின்ன இராணி இதனால் மனவருத்தமுற்று, உணவும் எடுத்துக் கொள்ளாமலிருக்கிறார். பெரிய மகாராணி அவ்வளவு வருந்தவில்லை. விவாகம் கொழும்பில் நடக்கப்போகிறதாம். அங்கிருந்தபடியே பிரான்சுக்கு ஓடி, தம்பதிகள் வாழப்போகிறார்களாம். ஒரு சமஸ்தானத்தை ஆளப் பிறந்த மன்னன், ஆண்டு கொண்டிருந்த மன்னன், ஓடிப்பிழைக்க நேர்ந்ததேன்? மாமிச இச்சையால் விளையும் விபரீதத்தைப்பாருங்கள்!

## அடிகள் கருத்து.

சென்னைக் காங்கிரஸில் நிறைவேறிய சுதந்திரத் தீர்மானம் குறித்து மறுபடியும் எழுதுவதாகக் காந்தியடிகள் தமது முந்திய கட்டுரையில் குறிப்பிட்டிருந்தார். எனவே, அடிகள் இவ்வார 'இளமை இந்தியா'வில் அது குறித்து ஒரு கட்டுரை எழுதியுள்ளார். அதன்சாரம் வருமாறு:—

பர்க்கன் ஹெட் பிரபுவுக்கு, சுதந்திரத் தீர்மானம் தகுந்த பதிலாகும் என்று சொல்லப்படுகிறது. இது உண்மையிலேயே நமது கட்சியானல், அரசியல் கமிஷன் நியமனத்துக்கும் அது நியமிக்கப்பட்டது குறித்துச் செய்யப்பட்ட அறிக்கையோடு கலந்த நிகழ்ச்சிகளுக்கும் எத்தகைய பதில் அளிக்க வேண்டும் என்பது குறித்து நமக்கு விளங்கவேயில்லை என்றாகும். நியமனமாகிய செயலுக்கு நாம் ஒருபதிலை அளிக்க வேண்டியதே. அந்தப் பதில் எத்தகைய வீரத்தனமான பேச்சுக்களுமன்று, எவ்வளவு துணிந்த அறிக்கைகளுமல்ல; ஆனல், பிரிட்டிஷ் மந்திரி, அவரது தோழர்கள், அவரைப் பின் பற்றியோர் ஆகியவரது செயலுக்கு ஏற்றதான, போதுமான செயலேயாகும் அப்பதில். காங்கிரஸ் எவ்விதத் தீர்மானங்களும் செயயவேயில்லையென்றும், தன் வசத்திலிருந்த அந்நியத்துணிகளின் ஒவ்வொரு சஜத்துண்டையும் மட்டில் குவித்துக் கொளுத்தியதென்றும், நாடு முழுவதும் இவ்வாறு செய்ய வேண்டுமென அது தூண்டிற்றென்றும் உத்தேசித்துக் கொள்ளுவோம்; கமிஷன் நியமனத்தின் பொருளுணர்ந்து இது போதிய பதிலாகாதெனினும், ஓரளவு பதிலாகும். ஹைகோர்ட் பிரதம நீதிபதிகள் துவக்கி சிறிய சிப்பந்திகள் வரை, துருப்புக்களும் உள்பட, சர்க்கார் உத்தியோகஸ்தர் யாவரும் வேலைநிறுத்தம் செய்யுமாறு காங்கிரஸ் செய்திருக்குமானல், அச்செயல், கமிஷன் நியமனத்துக்கு ஓரளவு போதிய பதிலாயிருக்கும். நமது குரோதனங்கள் யாவற்றையும் கண்டு அலட்சியமாய் நோக்கிக் கொண்டிருக்கும் பிரிட்டிஷ் மந்திரிகள், பின்னும் சம்பந்தப்பட்டவர்கள் ஆகியவரது மன அமைதியை நிச்சயம் அது குலைத்திருக்கும்.

ஆங்கில அதிகாரிகள் நமது பேச்சைக் கண்டு எள்ளி நமக்கு எரிச்சலுண்டாகும்படி செய்கிறார்கள்; நமது பேச்சிலே தங்களுக்குள்ள அவமதிப்பைச் சமயம் நேர்ந்தபொழுது அவர்கள் தங்கள்செயல் மூலம் வெளிக்காட்டுகிறார்கள். வாய்ச்சொற்களை விட அதிகத் திறமையுடன் அவர்களது செயல், "உங்களுக்குத் துணிவிருக்குமாயின் செயலிற் காட்டுங்கள்" என்று நமக்குக் கூறுகிறது. .உறை கூவியழைக்கும் இவ்வழைப்பை நாம் ஏற்றுச் செயல் செய்யும் வரையில், பயமுறுத்தும் நமது ஒவ்வொரு பேச்சும் ஒவ்வொரு சமிஞ்ஞையும் நமக்கு அவமானம் தருவதேயாகும்; நமது பேடித்தனத்தை ஒப்புக் கொள்ளுவதேயாகும் என்பது எனது அபிப்பிராயம். சங்கிலியால் பிணைக்கப்பெற்ற கைதிகள் பயனற்ற சபதங்களைச் செய்வதை நான் கண்டிருக்கிறேன்; சிறைக்காப்பாளர்களுக்கு அதனல் நகைப்பே உண்டாகும். மேலும் அவரோ ஒரு ஆங்கில பிரமுகர் மனத்திற்கு வருத்தம் உண்டாகும் ஏதோ ஒன்றைச் செய்து விட்டதற்குப் பதிலாக சுதந்திரம் திடீரென்று நமது முடிவான இலட்சியமாக ஆகிவிட்டதா? பிறருக்குத் திருப்தியுண்டாக்கவாவது, அல்லது அவர்களது செயலுக்குப் பதிலுக்குப் பதில் செய்வதற்காகவாவது, தமது இலட்சியங்களை மனிதர்கள் உத்தேசித்துக் கொள்வதுண்டா? சுயராஜ்யம் என்றவார்த்தையை எடுத்துவிட்டு சந்தேகத்திற்கிடமான தொரு அன்னிய வார்த்தையைக் கொணர்ந்து புகுத்துவது, பரிகசத்தக் குலைவாகும். காங்கிரஸ் நிகழ்ச்சிகளை, இந்தஸ் தானியில், இந்துஸ்தானியிலேயே, நடத்த வேண்டுமென்பதற்கு இந்தச் சுதந்திரத் தீர்மானமே முடிவான காரணமாகும்.

என் சம்பந்தப்பட்டவரையில், எனக்குப் பொருள் விளங்காத சுதந்திரத்திற்கு நான் ஆசைப்படவில்லை. ஆனல் ஆங்கில ஆட்சியிலிருந்து விடுதலைபெறவே நான் போராடிக் கொண்டிருக்கிறேன். அதற்கான எவ்விலையும் நான் கொடுப்பேன். ஆங்கில நாட்டிற்கு மாற்றுக் குழப்பம் கொண்டிருக்கும் நிலைமையை நான் ஏற்றுக்கொள்ள [illegible] நிலைமையில், ஆங்கில ஆட்சியின் மூலம் கிடைக்கும் சாந்தி சமாதிக்குழி[illegible]பின் சாந்தியேயாகும். ஜனங்கள் பூராவும் நடைப்பிணங்களாகவுள்ள அந்நிலையினும்எதுவும்மேலாகஇருக்கும்.இந்தச்சைத்தான்ஆட்சி இவ்வழகிய நாட்டைப் பொருள் துறையிலும் ஒழுக்கத்துறையிலும் உடல்வன்மையிலும் அநேகமாக நாசம் செய்துவிட்டது.

ஆனல் எந்தச் சந்தர்ப்பத்திலும் எனது கொள்கை அஹிம்சையேயாகும். எனது வழி உள்ளத்தை மாற்றுதலாகும்; பலாத்காரமன்று. அது துன்பத்தை, தான் அனுபவிப்பதாகும்; கொடுங் கோலனைத் துன்புறுத்துவதன்று. எனது ஆசை, சுதந்திரத்தினும் மிக உயர்ந்ததாகும். வலுவிற்குறைந்ததென்று சொல்லப்படும் நாடுகளைமேனுடுகள் கொள்ளையடித்து வருகின்றன. அதில் மிகஅதிகப்பங்குடையதாக ஆங்கிலநாடுஇருந்துவருகிறது அந்நாடுகளையெல்லாம் மிதித்து நாசம் செய்யும் மேனுட்டுக் கொள்ளையினின்றும் விடுவிக்க, நான் தேடுகிறேன். ஆங்கிலேயரை மனமாற்றம் செய்விக்க இந்தியாவால் முடியும். அது அவ்வாறு செய்விக்குமானல், உலகத்தின் ஐக்கிய ஆட்சியிலேயே இந்தியாபிரதமப்பங்கைப் பெற்றிருக்கும். அவ்வைக்கியஆட்சியில் தனக்கு விருப்பமாயின் ஆங்கிலநாடும் சேர அதற்கு உரிமையுண்டு. தனது ஜனத்தொகை காரணமாகவும் பூகோளத்தில் தனது இடம் காரணமாகவும் பல்லாண்டுக் கணக்காகப் பாரம்பரையாக வந்துள்ள தனது நாகரிகம் காரணமாகவும் தான் அவ்வாட்சியில் பிரதம பங்காளியாக இருக்க இந்தியாவுக்கு உரிமையுண்டு; அதை இந்தியா அறிந்து கொள்ள மாத்திரம் வேண்டும். இது ஆகாயக்கோட்டையான பேச்சென்பது எனக்குத் தெரியும். வீழ்ந்து கிடக்கும இந்தியா உலகத்தையே இயக்கி வலுவிற்குன்றிய நாடுகளைக் காப்பாற்றுவது என்ற ஆசை, இந்தச் சுதந்தரக் கூக்குரலைப் பலமாக எதிர்க்கும் எனது எதிர்ப்பை விளக்குவதற்காகவன்றி, ஒவ்வாதது என்று தோன்றும். வெளிச்சத்தை மரக்காலுக்குள் வைத்து (எனது ஆசையை) நான் இனி மறைக்கமாட்டேன். அதற்காக உயிர் வாழவும், உயிரைவிடவும் தகுதிகொண்டதாகும் எனது ஆசை. என்ன விளையுமோ வென்று அஞ்சி, அதற்காக மிகச் சிறந்த நிலையை விட்டு அதற்குக் கீழானதொன்றை ஏற்றுக் கொள்ள எந்நிலையிலும் நான் விரும்பேன். எனவே, எனது முடிவான இலட்சியம் சுதந்திரம் அல்லவென்று நான் எதிர்ப்பது அனுபவத்திற் கிசைந்ததேயாகும். இந்தியா தன்னைத் தானே சார்ந்த நிலையை எய்தவேண்டும் என்று நான் விரும்புகிறேன். சுயராஜ்யம் என்பதைத் தவிர வேறு எந்த வார்த்தையாலும் அந்த நிலையை அதைவிடச் சிறக்க விவரணம் செய்ய முடியாது. ஒரு குறிப்பிட்ட சமயத்தில் நாடு தனது சக்தியைக் காட்டக் கூடிய செயலுக்கு இசைய அதன் பொருளும் மாறிக்கொண்டே யிருக்கும். இந்தியா தனது சுய நிர்ணயத்தைப் பெறுதல் என்பதன் பொருள் ஒவ்வொரு நாடும் அவ்வாறே செய்தலாகும்.

### ஜவார்லால் நேருவின் அறிக்கை.

அகில இந்தியக் காங்கிரஸ் கமிட்டியின் பொதுக்காரியதரிசியான பண்டித ஜவாரிலால் நேரு கீழ்க்கண்ட அறிக்கையை அசோசியேடெட் பிரஸ்ஸுக்கு விடுத்திருக்கிறார்:—

சென்னைக் காங்கிரசின் சுதந்திரத் தீர்மானத்தைக்குறித்துப் பற்பல குறிப்புரைகளும் வியாக்கியானங்களும் பத்திரிகைகளில் வெளியாயிருக்கின்றன. இந்தத் தீர்மானத்தைக் குறித்துச் சில தவறான அபிப்பிராயங்கள் உண்டாயிருப்பதாகக் காணப்படுவதால், காங்கிரஸ் காரியதரிசி என்ற முறையிலும், விஷயாலோசனைக் கமிட்டியிலும் திறந்தகாங்கிரசிலும் அதைப் பிரரேபனை செய்தவன் என்ற முறையிலும் அதன் பொருளைக்குறித்து நான் விளக்க விரும்புகிறேன். அந்தத் தீர்மானம் யோசனையின்றி அவசரமாக கொண்டுவரப்படவில்லை. அதிலுள்ள விஷயம் சில ஆண்டுகளாக நாட்டில் விரிவாக விவாதிக்கப் பட்டு வந்திருக்கிறது. காங்கிரசின் யோசனைக்குத் திரும்பத் திரும்பப் பற்பல உருவங்களில் வந்திருக்கிறது. பல மாகாணக் கமிட்டிகள் பின்னமாக அதை அங்கீகரித்திருக்கின்றன. இந்த விஷயத்தைக்குறித்து நானும் வேறுபலரும்இந்தியப் பத்திரிகைகளிலும் அன்னிய நாட்டுப்பத்திரிகைகளிலும் எழுதியிருக்கிறோம். அநேகம் கூட்டங்களில் பேசியிருக்கிறோம். அன்றியும், விஷயாலோசனைக் கமிட்டி செய்த தீர்மானத்தை யோசனையின்றியாவது அவசரத்துடனாவது அது நிறைவேற்றவில்லை. அது மூன்று மணி நேரம் விவாதிக்கப் பெற்றது. அதற்குச் சாதகமாகவும் பாதகமாகவும் நீண்ட பிரசங்கங்கள் அரைடஜனுக்கு மேல் செய்யப்பெற்றன.

நிறைவேறிய தீர்மானம் முற்றும் தெளிவாகவும் பூர்த்தியானதாகவுமிருக்கின்றது. சுதந்திர நாடொன்றின் சட்டப் பூர்வமான விவரணம் தேசிய சுதந்திரம் என்பதேயாகும். பிரிட்டனுடன் அதற்கு இப்பொழுது இருந்துவரும் முறையிலுள்ள சம்பந்தம் அறுந்து போகவேண்டும் என்ற பொருள் அவசியம் அதில் அடங்கியிருக்கிறது. ஆனல் இந்தியாவுக்கும் இங்கிலாந்துக்குமாவது, அல்லது பிற எந்த நாட்டுக்குமாவது கூட்டுறவு இருத்தலாகா தென்பது அதன் பொருளல்ல; பிரிட்டனின் மீது எவ்விதக் கெட்ட எண்ணமும் அதன் பொருளல்ல. ஆனல்,சுதந்திரத்திற்குப் பின்னரே கூட்டுறவுகள் பற்றிய கேள்வி எழுகிறது என்பது அதன் பொருளாகும். அன்னிய நாட்டுச் சேனை இந்தியாவில் இருப்பதைத் திரும்ப அழைத்துக்கொள்ள வேண்டுமென்பதும் வெளிப்படையாகவும் மிக முக்கியமாகவும் சுதந்திரத் தீர்மானத்தின் பொருளாகும். எகிப்திற் போலவே இந்தியாவிலும் இத்தகைய அன்னிய நாட்டு ராணுவம் ஒன்று இருந்துகொண்டு நாட்டின் இயக்கங்களைக் கண்காணித்து அடக்கி வரும்பொழுது சுதந்திரம் எதுவும் இருக்க முடியாது. ஆகையினல் சேனையைத் திரும்ப அழைத்துக் கொள்ளுமாறு காங்கிரஸ் கூறுகிறது. தீர்மானத்தின் மேல் செய்யப்பெற்ற பிரசங்கங்கள் அதைத் தெளிவு படுத்தி யிருக்கின்றன. இந்தியாவில் பாதுகாப்புத் தேசிய அரசாங்கத்தின் ஆதிக்கத்திற் குட்பட்டதொரு இந்தியச் சேனையினிடம் ஒப்படைக்கப்படலாம். சுதந்திரமே நமது முடிவான இலட்சியமாக அறிக்கை செய்யப்பெற்றது. சுதந்திரத்தை எட்டு முன்னர் இடைப்பட்ட இலட்சியங்கள்உண்டு என்பது அதன் பொருளல்ல, பொருளாயிருக்கவும்முடியாது.சீக்கிரத்தில் அதை அடையமுடியுமா அல்லது முடியாதாவென்பது நாட்டின் வலிமையைச் சார்ந்திருக்கிறது. தேசிய இயக்கம் பலவீனமாக இருந்துவருமானல் அதை அடையமுடியாது. வெற்றி பெறுவதற்கான வலிமையிருந்தால்தான் வெற்றியைப் பெறமுடியும்; ஆனல், நாம் வலிமையுடனிருக்கிறோமோ, வலிமையற்றிருக்கிறோமோ; எவ்வாறாயினும் சரி, நாம் போராடிக்கொண்டிருக்கும் முடிவான ஒரே இலட்சியம் சுதந்திரமே என்பதைக் காங்கிரஸ் தெளிவுபடுத்திவிட்டது. இயல்பாகவே பிரிட்டிஷ் சம்பந்தத்தை அறுத்துக் கொள்ள வேண்டுமென்பதும் நமது தற்காப்புச் சேனைகளின் மீதும், அன்னியநாடுகளுடன் நாம் வைத்துவரவேண்டிய சம்பந்தத்தைக்குறித்தமுறையிலும் நமக்குப்பூரண ஆதிக்கம் இருக்கவேண்டுமென்பதும் அதில் அடங்கியிருக்கிறது.



## தந்தி.

(ஊழியனுக்காக வந்த தந்தி)

பினங்கு பிரபவ தைமீ ௩௨

| | |
|---|---|
| உண்டியல்விலை | நூற்றைம்பத்துநான்கு |
| ஈயம் | நூற்றிருபத்தாறு |
| ரப்பர் | தொண்ணூறு |

ரங்கூன் பிரபவ தைமீ ௪௨

| | |
|---|---|
| பவுன் பழையது | ௧௩–௧0–௬ |
| ,, புதியது | ௧௩–அ–௬ |
| படகு நெல் (புதியது) | ௧அ0–0–0 |
| ரயில் நெல் | ௧௭௫–௭–0 |
| ஸ்பெஷல் அரிசி | ௪௧௫–௦–0 |
| சிறியமில் அரிசி | ௪௪௫–0-0 |
| பெரியமில் | ௪௨௫ ௪௩0-0-0 |
| மில்சார் அரிசிபுழுங்கல் | ௫௧௫,௫௨0-0-0 |
| புழுங்கல் நசேன் | ௪௪0–0–0 |
| எ. ஒன். | ௪0௫–0–0 |
| மிளகாய் | ௬0-0-0 |
| மொச்சை | ௧00-0-0 |
| தட்டை | ௪00-0-0 |
| உளுந்து | ௪௪0-0-0 |
| சிவப்புப் பீனிஸ் | ௨௩0-0-0 |
| வெள்ளை பீனிஸ் | ௨௪0-0-0 |
| பருத்திக்கொட்டை | ௧–அ-0 |
| வெங்காயம் | ௩௫-0-0 |
| சோளம் | ௨அ௫-0-0 |
| தவணை வட்டி | 0-௧௨-0 |

### உள்ளூர்.

| | |
|---|---|
| சென்னை உண்டியல் வட்டம் | 0–௫–0 |
| ரங்கூன் உண்டியல் வட்டம் | ௧–௪–0 |
| பவுன் (பொற்காசு) | ௧௩–௭–0 |
| வெள்ளி ரூபாயிடை | 0–௧0-0 |
| கொழும்பு வட்டம் | ௧–0–0 |

**தட்ப வேப்ப நிலை:—**

உயர்ந்த அளவு- அ௬.0

குறைந்த அளவு-அ௭.0

ஆயு வேத தர்மவைத்தியசாலை:— டிசம்பர் மாதத்தில் மேற்படி வைத்தியசாலையில், திரு. எஸ். எஸ். பி. சுப்பிரமணியன் அவர்களால் கீழ்க்கண்ட விபரப்படி வைத்தியம் செய்யப்பட்டதாக அறிவிக்கப்படுகிறது:—

(௧) இந்துக்கள் ஆண் ௧௩௭0, பெண்கள் ௧௩௬௬, குழந்தைகள் அஅ0, தினம் வந்தவர் சராசரி ௧௧அ, மொத்தம் ௩௬௧௪௬.

(௨) மகம்மதியர்: ஆண் ௩௬௧, பெண்கள் ௩௬, குழந்தைகள் ௩௩, தினம் வந்தவர் சராசரி ௪, மொத்தம் ௧0அ.

(௩) கிருஸ்தவ ஆண்கள் அ. இதில் பழைய நோயாளிகள் ௨௬௭௩, புதிய நோயாளிகள் ௧0அ௩.

### தேவகோட்டை.

மாணவர் சங்கத்தின் எட்டாவது ஆண்டு விழா நாளது மாதம் அ,௬௨-களில் நடைபெறுமென கரு. கதி. நாச்சியப்ப செட்டியாரவர்கள் அறிவிக்கின்றார்கள்.

### நன்கொடை.

ஆத்தங்குடி திருவாளர், பெ. நா. மு. முத்துப் பழனியப்ப செட்டியாரவர்கள் ௩—௧—௨அ-ல் தமக்கு மலாய்நாட்டில் ஜே. பி. (சமாதான நீதிபதி) என்ற பட்டம் கிடைத்ததைக் குறித்து, நமது ஊழியனுக்கு ரூபா. ௫. நன்கொடை தந்துள்ளார்கள். நமது நன்றி அவர்களுக் குரியதாகுக. காரியஸ்தர்.

## கப்பல்.

'எதியோபியா' கப்பல் இன்று சென்னைத் துறைமுகத்திலிருக்கிறது தைமீ ௭௨ வெள்ளிக்கிழமை ரெங்கூனுக்குப் புறப்படும்.

'நைரியா' கப்பல் தைமீ ௫௨ புதன்கிழமை சென்னைத் துறைமுகத்துக்குவரும். ௭௨ வெள்ளிக்கிழமை பினங்குக்குப் புறப்படும்.

'ரோஹ்னு' கப்பல் தைமீ அ௨ சனிக்கிழமை சென்னைத் துறைமுகத்துக்குவரும். ௧0௨ நாகப்பட்டணத்துக்கு வந்து ௧௨௨ புதன்கிழமை மலாய்நாடுகளுக்குப் புறப்படும்.

வந்து விட்டது! ... ... ...
... ... ... முந்துங்கள்!

## தமிழ் டைப்ரைட்டர்.

நக் தமிழ்நாட்டவரின் சௌகர்யத்தையும், தமிழ் பாஷாபிவிருத்தியையும் கருதி தமிழ் டைப்ரைட்டர் மிஷின் புதிதாய்த் தாவமைத்திருக்கிறோம், மிகவும் அழகானது. அடக்கமானது. வேலைக்கு எளிதானது. உறுதியானது. மிகவும் சுத்தமான எழுத்துக்களையுடையது. சில நிமிஷநேரத்தில் நமக்கு வேண்டிய கடிதங்கள், கார்டுகள். கவர்கள் முதலியன நாமே அடித்துக் கொள்ளலா . ஏராளமான மிஷின்கள் சீக்கிரம் செலவழிந்து கொண்டிருப்பதால் உடனே முந்திகொள்ளுங்கள்.



லக்ஷ்மி பிராண்டு சிமிந்தி.




ஜர்மனியில் தயாரான "லக்ஷ்மி பிராண்ட்" சிமிந்தி மிக உத்தமமானது என எல்லாராலும் மதிக்கப் படுகிறது. ஒருமுறை பரீக்ஷியுங்கள்.

மாளிகைக்கு ... ... ...
... ... ... அலங்காரம்!

## பளிங்குப்பரப்புக்கற்கள்.

பளபளப்பான பளிங்குப் பரப்புக் கற்களும், பலவித பூப்போட்ட கற்களும், சுவற்றில் பதிக்கக்கூடிய புது புது மாதிரி ரேக்குக் கற்களும் நூதன மாதிரி அழகிய பார்டர்களும், சானிட்டரி சம்பந்தமான ஸ்னானத் தொட்டி, முகங்கழுவுந் தொட்டி, லாட்டரின் தொட்டி, வகைகளும் மார்பிள் கல்லினலாய பலவித லீலாவிநோத உருவச் சிலைகளும் இந்து விக்ரகங்களும் 6x3 படுக்கைக் கற்களும், மணமக்கள் உட்காரும் மணைகளும் சகாயவிலைக்கு எப்பொழுதும் தயாரிலிருக்கின்றன.



(167)

# லக்ஷ்மிரதன்ஸ் லிமிடெட்,

தம்புசெட்டித்தெரு, சென்னை.

---

மிகவும்உபயோகமுள்ளவை! 10-ரூபாய் மதிப்புள்ளது!!
100-சாமான்கள் அடங்கிய அதிர்ஷ்ட வர்த்தகப் பெட்டியின்

கரார் விலை ரூ. மூன்றே!

சாமான்களின் விபரம்:— 14-காரட் நிப்புள்ள பவுண்டன் பேனு 1. 22-காரட் கோல்டன் இமிடேஷன் வைர மோதிரங்கள் 2. ஷெ ஷர்ட் பொத்தான்கள் செட் 12. ஷெ கல்லிழைத்த புருச்சுகள் 2. உயர்ந்த நிப்புகள் 12. புதிய மாதிரியான முகம்பார்க்கும் டேபில் கண்ணுடி 1. மணிபர்ஸ் 1. பலமாதிரி சிப்பி பொத்தான்கள் 8. விநோதமான பட்டன்கள் 6. சேஃப்டிபின் காப்பி, தாள், மற்ற டிராண்ஸ்பர் படங்கள் 12. பலரகம் பென் ஹோல்டர் 6. பல நிறச பென்ஸில் 6. ஜெர்மென் இங்கி மாத்திரை 6. உயர்ந்த பேனுகத்தி 1. செண்டு புட்டி 1. வாசனையுள்ள கூந்தல் தைலம் புட்டி 1. விளையாட்டு சாமான்கள் 6. உயர்ந்த சேப்டி பின்கள் 12. மடிப்பு கத்தரிக்கோல் 1. உயர்ந்த சைனு இங்கி புட்டி 1. காபிகேஷன் சாவி வளையமும் செயின் 1. பாக்கெட் நோட் புஸ்தகம் 1. ஆக 100-சாமான்கள் அடங்கிய ஜெர்மன் அழகிய சாம்பில் பெட்டியுடன் விலை ரூபா 3. தபால் செலவு இனம். (119)

ஏஜண்டுகள்:— லக்ஷ்மி நாராயன் கம்பெனி, (27-வது பீட்,) மதராஸ்.

---

வியாபாரத்திற்கழகு விளம்பரமே.

14-காரட் நீ "வேவ்லி" ரிஜிஸ்டர் நிப்புள்ள அழகான ஆல்கனைட் சுரையுள்ள பேனு 1-க்கு விலை. ரூ. 3-4-0



500-சர்டிபிகேட்கள் பெற்றது லண்டன்மாநகரில் தயார் செய்தது.

இந்த பவுண்டன் பேனுவை தருவித்து எழுத்துவேலையில் உபயோகித்து பிடிக்காவிட்டால் 7-நாளைக்குள் வாபீஸ் செய்து தங்கள் தொகையை கண்டிதமாய் நாங்கள் வாபீஸ் செய்வோம்.

இரும் விபரம்:—உலகப் பிரசித்தி யாருக்கும்பொருட்டு விலையுயர்ந்த கெடியாரங்களை பாக்டெரியிலிருந்து 5-வருஷ காரண்டியுடன் ஒவ்வொரு கெடியாரமும் அனுப்பிக்கப்படும். பேனு 1-க்கு 3-8-0-க்கு பாக்கட்விவர் கெடியாரம் இனமாய் தருவதுடன் ஒரே தடவையில் இரண்டு பேனு ரூபா 6-8-0-க்கு வாங்கினல் 18- காரட் ரோல்ட் கோல்ட் கையில் கட்டும் கெடியாரம் ஒன்று இனமாய் இந்தமாதம் வரையில் தரப்படும். (தபால் செலவு வேறு.)

விலாசம்:— சி. துரை அண்டு கம்பெனி,
14. ராமானுஜய்யர் தெருவு, மதராஸ்.

(118)

---

வெளிவந்து விட்டது! வெளிவந்து விட்டது!!

# அம்பலத்தரசன்

(176)

அல்லது

## அமிர்தபுரியின் இரகசியங்கள்.

(எஸ். எஸ். அருணகிரி நாதர் எழுதியது.)

நாவல் வாசிக்க ஆவல்மிக்க அன்பர்களே! இதுவரையில் இந் நாவலாசிரியரால் எழுதப் பட்ட அநேக நாவல்களில் அம்பலத்தரசன் என்னும் இந்த நாவல் தான் மிகச்சிறந்தது. படிப்பவர் மனதைப் பிரமிக்கச் செய்யும்! இதில் துப்பறிபவர் தந்திரத்தை என்னென்றுரைப்பது! சுவையீகுந்த ததும்பும் இந் நாவல்தான் பார்க்க தகுந்த நாவல்! கொஞ்சம் காப்பிகள்தான் அச்சிடப்பட்டிருக்கின்றன. உடனே எழுதி வாங்கத்தவராதீர்கள்! விலை ரூ. 1—8—0. (தபாற் செலவுவேறு) இன்னும் எல்லாவிதபுத்தகங்களும் கிடைக்கும்.

விலாசம்:-தீனதயாளு அண்டு கோ, 176-தங்கசாலை, சென்னை.

---

## "இந்திய—மாதா"

மிஸ். காதரைன்மேயோ எழுதியது—சுத்தத்தமிழ் மொழி பெயர்ப்பு. பெரிய புஸ்தகம் உயர்ந்த பைண்டு.

விலை ரூ. 1—8—0 தபால் செலவு வேறு.

(51) முந்துங்கள்—சொற்பப் பிரதிகள்தான் மிச்சம்.

கே. எஸ். முத்தையா கம்பெனி தபால்பெட்டி 99. சென்னை.

ஊழியனில் விளம்பரம் செய்யுங்கள்.

---

விற்பனைக்குத்தயார்! விலை சரசம்!!

# குளிர்காலத்திற்கு

பலகலர் பூப்போட்ட உல்லன் போர்வைகள், ஷெ சாதா போர்வைகள், நூதன மாதிரி உல்லன் ஷர்ட்டிங்குகள், உல்லன் மப்ளர்கள், உல்லன் குல்லா தினுசுகள்,

மைசூர் ஜவுளி வர்த்தகசாலை, அம்மன் சந்நிதி, காரைக்குடி. (11)

ராய. சொக்கலிங்கனால் காரைக்குடி "ஊழியன்" அச்சுக்கூடத்தில் அச்சிட்டு வெளியிடப்பட்டது.

